''நான் உன்னை இறுகத் தழுவிக்கொண்டிருக்கிறேன். நீ என்னை அணைத்துக் கொண்டிருக்கிறாய். இருவர் மனமும் நிரம்பிய இந்த உடல் நிலையிலேயே சாவு சித்தித்தால் அதைவிடப் பதவி உண்டோ?'' என்றேன்.

உன் உடல் என் அணைப்புள் குலுங்கிற்று. என் கழுத்தை இறுகக் கட்டிக்கொண்டு விக்கிவிக்கி அழுதாய்.

நீ தேம்பினாய்:

''இன்று பகல் கண்ணயர்ந்து போய் ஒரு கனாக் கண்டேன். நான் ஏதோ ஒரு தோட்டத்தில் ஒரு மேடை மேலிருக்கிறேன். மாலை ஒன்று தொடுத்துக்கொண்டிருக்கிறேன். ரொம்பவும் ஆசையாய்த் தொடுக்கிறேன், சுறுசுறுப்பாய் தனி உயிர் பெற்றாற்போல் அது என் கைகளினிடையில் உருவாவது காண அலுப்பற்ற வியப்பாயிருக்கிறது. நீங்கள் என்னெதிரில் வருகிறீர்கள். உங்கள் கழுத்தில் ஆசையாய் மாலையைப் போடுகிறேன். போட்டதுதான் தாமதம், உடனே பிணமாய்த் துவண்டு நீங்கள் என் மடியில் விழுகிறீர்கள்...... அதுமுதல் மனசே சரியாயில்லை...''

'' 'அட அசடே, அப்படியானால் நான் சிரஞ்சீவி தான்!' என்று உன்னை நான் தேற்றினேன், ஞாபகமிருக்கிறதா?''

அவள் முகம் அவள் கைகளில் புதைந்திருந்தது. தோள்கள் குலுங்கின.

நேரமாகிவிட்டது. விளக்குகள் அவிந்தாகிவிட்டன. தாழ்வாரத்தில் மாத்திரம் ஒன்று எரிகிறது. எனக்கு அரைத் தூக்கத்தில் (தூக்கமா மயக்கமா) கண்கள் சொருகின. ஏதேதோ நினைவுகள் பொருந்தி பொருந்தி எடுக்கும் படங்களாய் மாறுகின்றன.

சின்ன வயதில் என் தம்பியும் நானும் ஒரே பாயில் கட்டிப் புரண்டது. அவனுக்குக் குளிருமோ எனும் பரிவில்

இழுத்து இழுத்துப் போர்த்தப் போர்த்த, தூக்கத்தில் அவன் உதறி உதறி எறிகிறான்.

நான் எஸ். எஸ். எல். சி. தேறினதற்கு, அம்மா கொழுக் கட்டை போடுகிறாள். அவள் விரல்களின் துடிப்பின் கீழ் மாவுச் சொப்புகள், பூரணத்தை ஏந்துவதற்காக என்ன வேகமாய், பூக்கிண்ணங்கள் போல தவிதவிக்கின்றன! பார்க்கவே ஆசையாயிருக்கிறது. நானும் ஒன்றேனும் செய்யப் பார்க்கிறேன். ஆனால் மாவுதான் அழுக்காகி வீணாகிறது.

பாவம்! அடுத்தாற்போல் மேல்படிப்புக்கு அடுத்த கப்பலில் நான் சீமைக்குப் பயணமாவதாய்த்தான் அம்மாவுக்குத் தியானம், தடபுடல்.

காக்ஷி மாறுகிறது.

கலியாணமாகிய புதுத் தம்பதிகள், இன்னும் கழற்றாத மாலையுடன், வண்டிவிட்டிறங்கி வீடு நுழைந்ததுமே அம்மாவை நமஸ்கரிக்கிறோம். அம்மா மருமகளை ஆசீர் வதிக்கிறாள். "பதினாறும்பெற்று, தோளோடு தாலி தொங்கத்தொங்கக் கட்டிண்டு தீர்க்காயுசாயிரு!"

ஆபீஸிலிருந்து வருகிறேன். என் சின்னத் தங்கை ஓடிவந்து முழங்காலைக் கட்டிக்கொண்டு "அண்ணா, நேக்கு சாக்கலேட் வாங்கிண்டு வந்தையோ?" என்கிறாள்.

திடீரென்று ஒரு சபலம் உதிக்கிறது. ஒருவேளை—

நான் மேகத்தில் புதைந்து கொண்டிருக்கையிலேயே அதைச் சுற்றிக்கட்டிய வெள்ளிரேகை நினைவு வந்தது.

நான் ஒருவேளை, மறுபடியும்—

—தூய பொன்னிறத்துடன் பிறந்து கொண்டிருக்கும் உதய சூரியனை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்தேன்.

# 8. மண்

உள் சரிந்த கூரை தலையிலிடிக்கும் ஒரு குடிசைத் திண்ணையில் உட்காந்து கொண்டேன். அவன் பூமியில் புதைந்த ஒரு ஆட்டுக்கல்மேல் குந்திட்டுக்கொண்டான்.

"இந்த வெய்யிலைப் பார்த்தீர்களா? இதில் எது புளைக்கும்? இந்த செங்கற்பட்டு ஜில்லாவிலேதான், இந்த மாதிரி வெய்யிலும், இந்தமாதிரி பாழடைந்த பேட்டை யும். ரோட்டுலே போயிட்டேயிருங்க, நடுவுலே நடுவிலே ஒரு பத்து வீடு, பதினைஞ்சு வீடு வெறும் குட்டிச் சுவர் மாத்திரம் நின்னிட்டிருக்கும். மழையிலே கறைஞ்சு, வெய்யில்லே உளுத்து—

இந்தப் பக்கத்திலே தண்ணி நிற்கிறதில்லே. என்னவோ பெரிசா பாலாறு வேகவதின்னு பெருமையா சொல்லு வாங்க. ஆனால் நான் பாக்கறது மணல்தானுங்க. வருசத்திலே பத்து மாசம் எனக்குத் தெரிஞ்சவிடமெல்லாம் மணல்தான். ஏதோ தூத்தலுக்கு குட்டையிலும், ஏரி யிலும் கட்டுதே, அதுதான் குடிக்கறத்துக்கு, குளிக்கறத் துக்கு, கை கால் கழுவறத்துக்கு, பயிருக்கு எல்லாத்துக்கும்.

பயிரான பயிர், என்ன பயிர் போங்க! புளியங்காத்து நெருப்பு தலை சுத்துது. பிணம் வேகறத்துக்குக் கட்டைக்கு குறைவில்லை கந்தக பூமி; பூமியின் குடலையே புடுங்கி எறியற மாதிரி ஏரையளுத்திப் போட்டு உளுதாலும் கல்லு தடுக்கி இரும்புதான் மொக்கையாவும். இந்தப் பக்கம் ஒரு

கதை சொல்லுவாங்க. கிணறு வெட்டறேன் ராசான்னு ஒருத்தன் தோண்டிக்கிட்டே போனானாம், தண்ணி கண்ட பாடேயில்லே. தோண்டினவன் அப்புறம் மேலே வரவேயில்லியாம்! ஊர் நீர்வளம் அப்பிடி!

ஊரிலே உலாத்தற புத்திக்கும் தரித்திரத்துக்கும் குறைச்சலேயில்லே. புளியமரத்திலே புளியம் பழம் காய்க்குதுன்னா நம்பமாட்டானுங்க. பிசாசு தொங்கு தடான்னா எல்லாரும் ரெடியா நம்புவாங்க. உடம்புலே எவனும் சட்டை மாட்டக்கூடாது. கண்ணாலே சுட்டுடு வாங்க. இங்கே நாலெழுத்துக் கூட்டிப்படிக்கத் தெரிஞ்சவன் ஆதிசேசன்.

என்ன இருந்தாலும் ஒரு விசயம் ஒப்புக்கணுங்க. படிச்சவன் படிக்காதவன் எல்லாரும் புளைச்சாவணும். பசி எல்லாருக்கும் ஒண்ணுதான்.

இந்த உசிர் இருக்கிறவரைக்கும், இந்த ஒரு சாண் வவுத்தை வளர்த்து எப்பிடியாவது புளைக்கணும்னு தானே, மனுசன் நாலுபேரோடே கூடறான், பிரியறான், சண்டை போடறான், சமாதானமாவறான்! இடை யிடையே மாரியாத்தா, வாந்திபேதி, ஒண்ணுமில்லாட்டா வயசு எல்லாம் அவனை வாரியடிச்சுட்டுப் போவுது. அப்பவும் இந்த உசிரிலே இருக்கிற ஆசையை என்னான்னு சொல்றது! எல்லாமே அதுலேதான் அடங்கியிருக்குதுங்க. சாமி, பூதம், பிசாசுகூட. பயிர் தண்ணிக்குக் காஞ்சா, கொடும்பாவி கட்டியிளுத்து அளுவறான். தண்ணி சாஸ்தியாப் போனா, கங்கம்மாளுக்கு ரவிக்கை, மஞ்சா, விளக்கு எல்லாம் முறத்திலே வெச்சு தண்ணியிலே விடறான். கோவமடங்கணும், வாழவைக்கணும் தாயேன்னு எல்லையம்மனுக்குப் பூசைபோடறான். என்னாத்துக்கு சொல்லவத்தேன்னா இந்த நம்பிக்கைன்னு ஒண்ணு இருக்குதே அதிலே அவ்வளவு இருக்குது— உடம்பிலே இருக்குதே அது உசிரில்லே நம்பிக்கைதான் உசிர்.

அந்த மாதிரி ஒரு நம்பிக்கையிலேதான் இந்த ஊர் ஆதியிலே உருவாச்சுன்னு சொல்லணும். வேறே எந்த எண்ணத்தை, மனசிலே வெச்சுக்கிட்டு ஆதியிலே இங்கே குடியேறின நாலுபேரோ, அஞ்சு பேரோ குடிசை கட்டினாங்கன்னு சொல்ல முடியும்? எனக்கு நெனைப்புத் தெரிஞ்சதிலிருந்தே, இந்த இடம் எல்லாத்துக்கும் ஒதுக்கு மாசாமர்சம் எட்டு மைலுக்கு அப்பாலே ஒரு சந்தை கூடுதே அதுலேதான் உப்பிலேருந்து கற்பூரம் வரை எல்லாம் வாங்கியாவணும். அப்படியும் எனக்கு நெனப்பு வயசு வரவேளைக்கு, அதிலே முளைச்ச நாலு வீடு நாற்பது வீடா வளர்ந்திருந்தது. வெறும் நம்பிக்கை வளத்து மேலே.

அந்த சமயத்திலே பேட்டைக்கு ஒரு ஆண்பிள்ளை யும் பெண்பிள்ளையும் குடியேற வந்தாங்க. புருசன் பெண்சாதின்னு நான் சொல்லமாட்டேன். பொம்புள்ளே களுத்துலே தாலியில்லே. முதுகிலே ஒரு மூட்டை, இடுப்பிலே கொளந்தை, அப்படித்தான் வந்தா. அவன் சக்கரத்தை உருட்டிக்கிட்டு வந்தான். அதோ பாருங்க— மேட்டுலே கூரை உள்ளுக்கு விளுந்து போயிருக்குதே, அந்தக் குடிசைதான் அவுங்களது. அங்கே வாசல்லே ஒரு பள்ளமிருக்குதே, அங்கே ஒரு முருங்க மரமிருந்தது. கொம்புலே புடவையை ஏணை கட்டி அதிலே கொளந்தையை வளத்து மண் பிசைஞ்சா, அவனே செவுரெளுப்பி, ஓலை முடைஞ்சு கூரை போட்டான். அப்புறம் வாசல்லே சக்கரத்தைப் போட்டான். குச வேலை செய்ய ஆரம்பிச்சான்.

நான் ஒரு விசயம் ஒப்புக்கணுங்க. நம்ப ஊரிலே அளகானவங்க ஒருத்தருமேயில்லை. அளகுக்கும் அலங்காரத்துக்கும் நேரமில்லே, வசதியில்லே, அப்படியே அளகு பண்ணிக்கிட்டாலும் பாக்கறத்துக்கு கண் இல்லே. இருந்தாலும் அவன் அவள், அவங்க கொளந்தை மூணு பேரையும் போல அவ்வளவு அவலச்சணம் ஒருத்தரையும்

நான் பார்த்ததில்லே. யாரையாவது ஏசிப்பேசினா அவன் என்ன கொம்பிலே ஏறிக் குதிச்சானான்னு கேக்கற பளக்கம். இவங்களைப் பார்த்தா கொம்பிலேறிக் குதிச்சவங்க மாதிரிதான் இருந்தது. நான் சொல்றது புரியுதுங்களா அதான், சிரிக்கிறீங்களே, புரிஞ்சுக்கிட்டிங்களா?

அவளுக்கு வாய்கொள்ளாமே பல் வெளியிலே துருத்திக்கிட்டு அதிலே ரத்தம் மாதிரி புகையிலைக் காவி. கண் நானும் இருக்கேன்னு சும்மா கீறினாப் போல. தலைமயிர் சடை போட்டிருக்கும். மூக்குன்னு மூச்சுவிட ரெண்டு தொண்டிதான். இவ இப்படின்னா, அவனுக்கு அவள் ரம்பைன்னுதான் அவன் இருந்தான். இருந்த உதடு அறுந்து தொப்புள் வரைக்கும் தொங்கிச்சு. அப்பிடின்னா அப்படியா? அவ்வளவு மோசம்னு நீங்களே நெனைச்சுப் பார்த்துக்கங்க. அத்தொடு கன்னத்திலே நீளமா, அசிங்கமா ஒரு வெட்டுத் தளும்பு வேறே.

மிருகங்கள்.

அவங்க சுபாவமும் அப்படித்தான் காட்டிலேயிருந்து பிடுங்கினமாதிரிதானிருந்தது. ஒரே முரட்டுத்தனம். ஒரு நாள் அந்த வழியாப் போனேன். ரெண்டு பேரும் ஒருத்தர் மாத்தி ஒருத்தர் என்னவோ பேசிட்டு இருந்தாங்க. அவன் மண்ணைச் சக்கரத்திலே கட்டிட்டு, சக்கரத்தை சுத்திக்கிட்டிருந்தான். திடீர்னு ஒரே பாய்ச்சல் பாய்ஞ்சு பூமியிலிருந்து ரெண்டு காலும் எளும்பி, பறக்கற மாதிரி ஒரு பாய்ச்சல் பாஞ்சு புறங்கையை வீசி அவ வாயிலே அடிச்சான் பாருங்க. நான் அலண்டு போயிட்டேனுங்க! உங்க வீட்டு அடியா, எங்க வீட்டு அடியா, மனுசன் தாங்கற அடியா அது? செம்மட்டி அடி அது. அவ உதட்டிலே ரத்தம் அப்படியே பிடுங்கிக் கிட்டுது.

என்னைப் பார்த்துட்டா. அவ புருசன் அடிச்சது கூட தெரியல்லே. நான் பார்த்ததுதான் பொத்துக்கிட்டுது.

தன்னா பின்னான்னு வண்டையா திட்டிக்கிட்டு ஒரு கல்லை வீசி என் மேலேயெறிஞ்சா. பெத்தேன் புளைச்சேன்னு ஓடி வந்துட்டேன். நான் சின்ன பையனுங்க!

அவங்க பாசமும் அப்படித்தான். அவங்களுக்கு ஒரு கொளந்தையிருக்குதுன்னு சொன்னேனே அதன் அழகை கேக்கணுமா? என்னாங்க அவரை போட்டால் துவரை மொளைக்குமா? இருந்தாலும் அவங்க பெத்த மகனில்லியா? அந்தப் பனங்கொட்டைத் தலையன் மேலே அவங்க உசிரையே விட்டுட்டாங்க. நான் தவறாமே விளக்கு வெக்கற வேளைக்கு வெளியிலே களிப்பு களிச்சுபடியிருக்கும். அதைப் பார்த்துட்டு எச்சில் துப்பித் துப்பி எனக்குத் தொண்டை கூட நோவு எடுத்துக்கும்.

அந்த மன்மதக் குஞ்சை ஒருத்தரும் பார்க்க முடியாது. அவங்களுக்கே, கலகலப்பான சுபாவம் கிடையாது. ஆளைப் பார்த்தாலே கடிக்க வராப் போலயிருக்கும். எங்களுக்கும் அவங்ககிட்டே ஒட்டல்லே. ஒரே ஒரு தெம்பு தான். ஒரு சட்டி, பானைவேணுமானா சந்தைக்குப் போய் வாங்கி எட்டு மைல் தூக்கி வரணும். இந்தத் தடவை பொங்கப் பானை நம்ம ஊரிலேயே வாங்கலாமில்ல? அதிலே ஒரு சந்தோஷமில்ல? அப்படியும் இப்படியுமா பொங்கலும் கிட்டக்கிட்ட வந்துட்டுது. அப்பசி போச்சு. கார்த்திகையும் பாதியாச்சு. மார்கழி மள்ளினா பொங்கல்.

இதுக்குள்ளேயும் ஒண்ணு நேர்ந்து போச்சு. அந்தக் குளந்தை இறந்துட்டுதுங்க.

சின்னக் குளந்தை சாவறத்துக்குக் காரணம் வேணுமா? படே படே ஆளெல்லாம் திடீர் திடீர்னு வாயைப் பிளந்துடறாங்க. குளிர் மார்லே தாக்கியிருக்கும். வாயிலே ஊட்டற கூழை மூக்கிலே ஏத்தியிருப்பா. பேச்சுக்கு சொல்றேனுங்க.

கொளந்தையைத் துணியிலே வாசல்லே நீட்டீட்டு அந்தப் பொம்புள்ளே அதன் பக்கத்திலே சுருண்டு விழுந்து கிடந்தா அவளண்டை அவன் மார்மேலே கையை ஒடுக்கி நின்னுகிட்டு இருந்தான். அவன் அழுவல்லே. கண் ரப்பையெல்லாம் கள் குடிச்சவன் மாதிரி ஜெவஜெவன்னு இருந்தது. பேட்டையிலே ரெண்டு மூணுபேர், மனசு இறங்கி வீட்டுங்கிட்டப் போனாங்க. சின்னச் சாவோ பெரிய சாவோ மனுஷன் ஒண்டியாத் திண்டாடினால் கஸ்டமில்லியா?

''ஐயோ பாவம், புளைக்க வந்த இடத்திலே''ன்னு ஒத்தரு ஆரம்பிச்சார். ஏதாவது சொல்லியாவணுமே.

அந்த ஆள் சீறி விளுந்ததைப் பாக்கணுமே!

''போதும் போதும் உங்களை யார் வரச் சொன்னது? ''நீங்களும் உங்க ஊரும்...!''

இந்த மாதிரி மனுசனோடே யார் என்ன பண்ண முடியும்? என்னமோ அவன் கொளந்தை போனது எங்க பொறுப்பு மாதிரி!

நான் ஒரு தடவை பார்த்தேன். எங்க ஊரிலே ஒரு பூனையிருந்தது. அதுக்குக் குட்டி செத்துப் போச்சு; தாய்ப் பூனை அப்படியே அதன் பக்கத்திலே குந்திட்டிருந்தது. ஒருத்தரையும் அண்ட விடல்லே. சவம் மூணு நாலு நாள் நாறிட்டு கிடந்தது,

நல்லா உச்சி வேளைக்கு செம்மட்டியை தோளிலே போட்டுக்கிட்டு, அவள் கிட்டேருந்து பிணத்தை முரட்டுத்தனமா பிடுங்கி, ஒரு கையிலே அணைச்சுக்கிட்டு, பேட்டை தாண்டிப் போனான். கொளந்தை கையும் காலும் லொடலொடன்னு ஆடிச்சு.

இந்த மாதிரி மனுசனோடே யார் என்ன பண்ண முடியும்?

அவங்க வீட்டிலே அழுகை சத்தம் அப்புறமே எப்பவுமே கேக்கலே. இருந்தாலும் ஓரோரு சமயம் குனிஞ்சு வேலையாயிருக்கிறவ, திடீர்னு நிமிந்து அவன் குளந்தையையும் செம்மட்டியையும் தூக்கிட்டுப் போன திக்கிலே பார்த்துட்டு நிப்பா. அவங்க புடிச்ச மண் மேலே, அவள் எழுப்பின மண்மேடு, அதோ புளிய மரத்தடியிலே அங்கிருந்தே தெரியும்.

ஒருசமயம் நாங்க ரண்டு மூணு பேர், இன்னும் ரண்டு கொளந்தையோடே சந்தைக்குப் போற ரோட்டோடே போனோம். அவள் எதிரே ஒரு கூடை மண்ணை தலைமேல் வெச்சுக்கிட்டு வந்தா; கையிலே வேறே ஒரு சின்ன மண்கட்டி வெச்சிருந்தா. வழியெல்லாம் ஆடிக்கிட்டு பராக்குப் பாத்திட்டு வந்த பசங்க, குறுக்கே விழுந்தடிச்சு ஓடிவந்து அவ மேலே மோதிக்கிட்டாங்க, பார்த்தா பாருங்க, ஒரு பார்வை! அந்த மனசிலே வெள்ளை முளி யிலே கருப்பு முளி ஒரு தடவை உருண்டு ஆடிச்சு. என்ன குமுறி வந்ததை அடக்கினாளோ, கைமண் மையா உதிர்ந்திச்சு.

ஆனா, என்னதான் வவுறு. மவனை நெனைச்சு உருகினாலும் கேக்குதா? அவங்க அவங்க வேலையை அவங்க அவங்க செஞ்சுதானே ஆவணும், அதுவும் பொங்கல் கிட்டக்கிட்ட வந்துட்டுது. சாவுக்கு ஊதற சங்கைத்தான் வெள்ளி முளைக்கிற வேளைக்கி சந்தோசத் துக்கு ஊதினான்னா சந்தோசமாயிருக்காதா? பொங்கல் வந்துட்டுது கிட்ட வந்துட்டதுன்னு சங்கு ஊதுது. பொங்கப் பானை பண்ணவேணாமா?

வெள்ளைக் காயிதத்தைக் காயிதமாக்கறவங்க, உங்களுக்கெல்லாம் தொழிலாளிகளைக் கண்டாலே ஒரு இளக்காரம். அதுக்கென்ன கண்பார்த்தா கைசெய்யுதுன்னு லேசா சொல்லிடுவீங்க. இந்த மண் வேலையை எடுத்துக் துங்க. இதுலே எவ்வளவு கஸ்டம் இருக்குது தெரியுங்களா?

மண்ணை காலும் கையும் நோவப் பொறுக்கி பிசைஞ்சு பதமா மிதிக்கணும். பானை பண்ணறதுன்னா லேசா? சக்கரத்திலேற விண்டு போறது எத்தனை? அப்புறம் அதை அடி மூட ஒரு தடவை பலகையாலே தட்டிக் கொட்டி அப்புறம் உருவாக்கறத்துக்கு மூணு தடவை தட்டி, வெய்யிலிலே காயவெச்சா, வெடிச்சுப் போறது எத்தினி, சூளையிலே உடைஞ்சு போறது எத்தினி! அது வாங்கற வேலைக்கு விக்கற விலை போதாதுங்க. மண்ணு தானேன்னு சொல்லுவாங்க. அப்படின்னா அப்புறம் எல்லாம் மண்தான், நான் மண்; நீங்க மண், எல்லாமே மண்தான்.

மார்களி மாதம் விடியற்காலை, பல்லு கிட்டற குளுருலே எளுந்து பானையை லொட்டு லொட்டுன்னு தட்டற ஒவ்வொரு தட்டும் பொங்கல் கிட்டக் கிட்ட வந்துட்டுதுன்னு, படுத்துட்டு இருக்கிறவங்க காதண்டை வந்து சொல்லுறாப் போலே இருக்கும்.

நம்ம பண்டிகையிலே பொங்கல்தானுங்க ஏளைக்கும் ரொம்ப வேண்டிய பண்டிகை. மத்ததெல்லாம் பணக்காரன் பண்டிகை. எந்த ஏளை வூட்டிலும் பொங்கல் மாத்திரம் புதுப்பானையிலே பொங்கியாவணுங்க. நாங்களெல்லாம் ஏளைங்க.

நடுவூட்லே அடுப்பு வெட்டி, பொங்கல் பொங்கி, இலையிலே பொங்கலை வெச்சு நடுவுலே குழிச்சு பாலை வார்த்து, சூரியனுக்குக் காட்டி, 'பொங்கலோ! பொங்கல்!'ன்னு கூவுவோம். வளி பிறக்குதோயில்லியோ தை பிறக்குதுங்க. அத்தோடு நல்ல வளிக்கு ஒரு நம்பிக்கையும் பிறக்குதுங்க.

இந்த ஒரு எண்ணத்திலே மாத்திரம் பேட்டையிலே இருக்கிறவங்க அத்தனை பேருக்கும் ஒத்துமைதான். தினப்படிக்கு வெங்கலத்திலே சோறு வேவற நாட்டாமைக்கார் வூட்டிலே கூட பொங்கச்சோறு புதுப் பானையிலேதான் வேவும்.

நாளைக்குப் பொங்கலுன்னா இன்னி சாயங்காலந் தான் பானை வாங்குவாங்க; பொங்கலன்னிக்கே புதுப் பானை வாங்கறவங்களும் இருக்காங்க. புதுவாழ்வுங்க, மார்களி சந்தைக்கு பேட்டையிலே ஒருத்தருமே இந்தத் தடவை பானை வாங்கப் போவல்லே. இந்தத் தடவை சந்தைப் பானையில்லே, நம் சொந்தப் பானை. அதுவே எவ்வளவு சந்தோஷம் தெரியுங்களா?

நான் படிச்சவன் இல்லிங்க, இருந்தாலும் நம்ம பேட்டை, 'நம்ம ஊர், நம் நாடு' நம்ம தேசம், எல்லாம் ஒண்ணுதானுங்களே!

புதுப்பானை வாங்கப் போறதே பேட்டைப் பொம் புள்ளேங்களுக்கு அதுவே ஒரு பண்டிகையாட்டந்தான். நடக்கற தூரம் பத்தடி தான் ஆனாலும் பேட்டைப் பொம் புள்ளேங்க, நாலும் அஞ்சுமா கூட்டம் போட்டு, சொருக்குப் பையை இடுப்புலே சொருகிக்கிட்டு கட்டைப் புகையிலையை கடைவாயிலே மாட்டியிளுத்துக்கிட்டு குசாலா பேசிச் சிரிச்சுக்கிட்டு குசவன் குடிசைக்குப் போற ஜோக்கை நான் தூர நின்னு பார்த்துக்கிட்டு இருந்தேன்.

வாசலுக்கெதிரே நாலாபக்கமும் கவுறு வேலி கட்டி, பானையை ஒண்ணுமேல் ஒண்ணா வரிசையா அடுக்கி அளகாயிருந்தது. இந்த ஒரு பொங்கலில்லே, இன்னும் மூணு பொங்கலுக்கு ஆவும், அத்தினி சாமான் பண்ணியிருந்தான். பொங்கப்பானை, தண்ணிப்பானை, பதார்த்தப் பல்லா, அடுக்கு, மடக்கு எல்லாம்.........

ரெண்டு பேரும் சிரிச்ச முவமா வரவங்களுக்கு காத்து நின்னுட்டு இருந்தாங்க. அவங்க சிரிச்சாங்கன்னா, அதுவே ஒரு அதிசயமில்ல?

பேரம் உடனே தொடங்கல்லே. அந்தப் பொம்புள்ளே சொன்னா: ''ஊரெல்லாம் வரட்டும்; ஊரெல்லாம் சேர்ந்து நாங்க கண்ணாலே பார்க்கணும்.''

கொஞ்ச நேரத்திலே, குஞ்சும் கொளந்தையுமா சின்னவங்களும் பெரியவங்களுமா குசவன் வாசலுக்கெதிரே கூட்டம் முட்டிப் போச்சு, கசகசன்னு சத்தம்.

''எல்லாரும் வந்துட்டீங்களா?''ன்னு அந்தப் பொம்புள்ளே இறைஞ்சு கேட்டாள். 'ஆமா'— ஒரு நூறு பேர் இந்த ஒரே வார்த்தையை ஒரே சமயத்திலே சொன்னா எப்படி இருக்கும் நெனச்சுப் பாருங்க.

அந்தப் பொம்புள்ளே, சிரிச்சுக் கிட்டே அவ எதிரே அடுக்கி இருந்த ஒரு பானை வரிசை மேலே ஒரு உதை விட்டா.

உதை ஒண்ணுதான். ஆனா அந்த அடுக்கு, அடுத்த அடுக்கு மேலே சாஞ்சு, அது ரெண்டும் அதுக்கடுத்தது மேலே, அதுக்கடுத்தது மேலே வரிசை வரிசையா பானை ஒடஞ்சி பார்த்திருக்கீங்களா? கேட்டிருக்கீங்களா? எத்தனை பானை!

எங்களுக்கு என்ன சொல்றது, செய்யறதுன்னு தோணல்லே. பானையிடிஞ்சதிலே எங்க அத்தனை பேர் வவுத்திலேயும் என்னவோ இடிஞ்சது.

''நீங்களும் ஒங்க ஊரும்''—னு அந்த பொம்புள்ளே பாம்பாட்டம் சீறினாள். அவசரமா குனிஞ்சு ஒரு பிடி மண்ணெடுத்து காத்துல்லே ஊதினா. ''என் கொளந்தே பூட்டுது— நாங்களும் போறோம்— நீங்க சந்தோசமா யிருங்க......'' ரெண்டு பேரும் வேகமா நடந்து போயிட்டாங்க. கண்ணுக்கு கூட மறைஞ்சு போயிட்டாங்க. கல்லா சமைஞ்சிருந்தோம்— அத்தனை பேரும் நின்ன இடத்துலே நின்னுட்டு.

ஒரு பானை கூட மிஞ்சில்லேங்க அப்பவே அந்த இடம் சுடுகாடு மாதிரி ஆயிட்டுது.

அப்புறம் ஊர் உருப்படலேங்க. மாத்தி மாத்தி ஏதாவது நேந்துட்டிருந்தது. பெய்யற மழை கூடப் பெய்யல்லே, பயிர் எல்லாம் செத்துப் போச்சு. வாந்தி பேதி வேண்டிய பேரை வாரிக்கிட்டுப் போச்சு, இருக்கிறவங்க ஒவ்வொத்தரா கயண்டுக்கிட்டாங்க, எல்லோருக்குமே ஒரு கிலி பிடிச்சுப் போச்சு.

ஊரிலே பொங்கலன்னிக்கு, புதுப்பானையிலே பொங்கல் வேகல்லேன்னா அப்புறம் என்னங்க? நீங்களே சொல்லுங்க, நம்பிக்கை பூட்டுதுன்னா அப்புறம் என்ன இருக்குது?''

# 9. சுமங்கல்யன்

"ஏவ்— ஏவ்!"

இடி குமுறுவது போன்று ஒரு ஏப்பத்தை விட்டு, தொப்பையைத் தடவி, சற்று எட்டவிருந்த செல்லத்தைக் கிட்ட நகர்த்தி...

இன்றைய சமையலே வெகு ஜோர்— பரவாயில்லை. குட்டி கை வாயிக்கிறது! மைசூர் ரஸமும், டாங்கர் பச்சடியும், அந்த கத்தரிக்காய் எண்ணெய்க் கறியும் நன்னா அமைஞ்சு போச்சு.

இந்தக் கத்திரிக்காயிருக்கே, இவள் திருத்திய மாதிரியே அலாதி. கதம்ப சாம்பாருடன் சேர்த்தாலோ? மொச்சைப் பருப்பு, முருங்கைக்காய், கத்திரிக்காய், முள்ளங்கி, வெங்காயம் எல்லாம் ஒன்றாய்ப் போட்டு, பருப்பைக் கொட்டி, தேங்காயும் அரைத்து விட்டு, அப்பளத்தையும் பொரித்துவிட்டால், ஆஹா? ஹாஹா! நாக்கில் ஜலம் சொட்டறது. ஆனால் இந்த வெங்காயத்தை தள்ள வேண்டியிருக்கே? ஒரொரு சமயமும் ஏண்டா காசிக்குப் போனோம் என்றிருக்கு. என்ன பண்ணுகிறது, போகிற வழிக்கும் புண்ணியம் தேட வேண்டியிருக்கே. வயது அப்படியே உட்காந்து கொண்டேயிருக்கிறதா?— சரி— வெற்றிலையைப் போடலாமா? ஒரொரு காரியத்துக்கும் ஒரு ஒரு தர்மம் இருக்கிறது. வெற்றிலை போடுவதையும் சேர்த்துத்தான் பாக்கை ஊதி வாயுள் எறிந்து, மெல்ல அதுக்கிக் கொண்டே வெற்றிலையை தொடையில்

துடைத்து, காம்போடு நடு நரம்பை உரித்தெறிந்து விட்டு, சுண்ணாம்பைத் தடவி மடித்துக் கடைவாயில் கொடுத்து மெள்ள உள்ளே செலுத்தி... இந்த சுகம் போடறவனுக்குத் தானே தெரியும்!

இந்த நாளில் யார் இப்படி அநுபவித்து வெற்றிலை போடறா? பெரிசிலேருந்து சிறிசு வரை பொம்மனாட்டிகள் உள்பட இப்ப எல்லாம் 'பீடா, கிள்ளி' என்று அலையறதுகள். பழைய நாள் போல் எதுதான் இருக்கிறது? அந்த ஆரோக்கியமென்ன, ஆசாரமென்ன, பழைய காலமே காலந்தான்— வெற்றிலைப் பாக்கிலிருந்தே பேசுவோம். அந்த நாளைய வாசமும் காரமுமாயிப்போ இருக்கிறதோ? உதடும் நாக்கும் எப்படிப் பற்றும்! இப்பொத்தான் சிவப்புக்கு என்னவோ ஒரு பென்சிலையெடுத்து கண்ணாடிக்கெதிரில் ஒரு மணியா தீட்டிண்டு நிற்கிறதுகளே! பிறக்கிற போதே பீடி பிடிச்ச மாதிரி கறுப்பு உதடோடு பிறக்கிறதுகள்! பண்ணுவதெல்லாம் அக்கிரமம்! அல்பாயுசுக்கள். ஈர், பேன் நசுக்கிற மாதிரி மடிந்து விடுகிறதுகள்! உயிரோடு வளைய வரக்கூடத் துப்பில்லை கர்மம் கர்மம்! சரி, இருக்கிறவரைக்குமாவது சரியாயிருக்கிறதுகளா? உயிரை வாங்கி விடுகிறதுகள்.

பாறேன், இந்தக் குட்டிக்குமுன் அந்த வத்சலையிருந்ததே அதன் கிட்டவிருந்து தப்பிச்சாலே போதுமென்று ஆய்விட்டது. மூணு வருஷத்துக்குள் மூச்சு திணறிப் போச்சு. ஏதோ படித்த பெண்ணாயிருக்கே, நீக்குப் போக்குத் தெரிந்து நுட்பமான மனஸறிஞ்சு நடக்கும் என்று கட்டிக் கொண்டது போக, அது பணத்தைத் தண்ணிக் கணக்கில் வாரிவிட்ட தினுசைப் பார்த்தால் பத்துக் குழந்தை பெற்ற சம்சாரி கெட்டான் போ! ஏதேது, மனசு நோகடிப்பில் அவளை நானே முந்திக்கொண்டு விடுவேனோ போல் அல்லவா ஆயிடுத்து! எத்தனை தினுசு புடவை, வாசனைத்தைலம், ஸ்நோ, கொண்டை ஊசி, பவுடர்! கண்ணாறாவி! இத்தனை

சிங்காரத்துக்கும் தக்கபடி லக்ஷணமாவது உண்டா? புருவத்திலிருந்து நெற்றிக்கு முன் மயிர் ஆரம்பித்து விட்டது! மூக்கு, மேட்டைப் பார்த்துக்கொண்டு— பல்லில் கல்யாணத்துக்குத் தேங்காய் துருவலாம். அந்தக் கோணவகிடும் அதற்கு ஒவ்வாமல் கொசுவக்கட்டும், கர்நாடகமும் நாகரிகமும் கலந்த ஒரு புது நாடகமாய்—

வேறே வேலையோ கிடையாது. பொழுது எப்படித் தான் போகிறது? எந்த இடத்தில் என்ன சினிமா, என்ன பாட்டுக் கச்சேரி, கூத்து, சர்க்கஸ், என்று அலைந்து கொண்டேயிருக்கும். எத்தனை நாளைக்கு, ஆய்ந்து ஓய்ந்து வீட்டில் ஆறுதலையடைய நினைந்து வந்தால்— படியேறுமுன் பக்கத்து வீட்டிலிருந்து பையன் வந்து விடுவான்— "எங்காத்துப் பாட்டியோடு உங்காத்து மாமி சினிமாவுக்குப் போயிருக்கா. உங்களை நேரமாச்சுன்னா சாதத்தை எடுத்துப் போட்டுண்டு, எலி தள்ளாமல் அழுந்த மூடிவைக்கச் சொன்னா?" அடராமா இப்படியும் என் பிழைப்பு ஆகணுமா? 'அழுத்த மூடிவைக்கச் சொன்னா'— என்ன வக்கணை! கோர்த்து அறையலாமா என்று ஆத்திரம் வரது. வந்து என்ன பண்ணுகிறது?

வருவாள். குறட்டு விட்டுத் தூங்கும் பிரம்மானந்தத்தை கலைக்க, வாசற்கதவின் வெளித் தாழ்ப்பாளைத் தடதடவென்று ஆட்டிக்கொண்டு, 'லலல' சினிமாவில் கேட்ட புதுமெட்டை இழுத்தபடி, "என்ன தூக்கம் அதுக்குள்ளே, படம் பத்தாயிரம் அடிதானே? சுருக்க விட்டுட்டான். சுமாராய்த்தானிருந்தது ஐய! நன்னாவேயில்லை"—

ஒரொரு தடவையும் இப்படித்தான் போவதில் என்னவோ குறைச்சலில்லை. "பூ! என்னத்தைப் பாடிப்பிட்டேன்! என்னவோ— தேவலை— த்ஸ"— சுமாராயிருக்கு" நன்றாயில்லை என்று சொன்னால்தான் நாகரிகத்தின் சிகரத்தைப் பிடித்து விட்டதாய் நினைப்பு.

என்ன ஆச்சரியம்! பொறுப்பில்லாமல், சின்னக் குழந்தை மாதிரி. அப்படியே அவளும் காலத்தைத் தள்ளி விட்டாளே! சரியா மூணுவருஷங்கூட வாழவில்லை இதே மாதிரி ஒருநாள் ராத்திரி கொட்டுமழையில் எங்கேயோ காட்சி பார்த்துவிட்டுத் தெப்பமாய் நனைந்து வந்து உடம்பு வெடவெடவென உதறிக்கொண்டு வந்து படுத்தவள்தான்.

மூணாம் நாள் காலி—

உடம்பு என்னவோ பூஞ்சை. அவள் வேலை வெட்டிக்கு லாயக்கில்லை ஆனால் அதை நம்பியா பண்ணிண்டோம்? என்னவோ நமக்கு வயது ஆகிண்டே வரதே, இந்த 'புத்' என்னும் நரகத்தைத் தாண்ட மாட்டோமா என்கிற சபலம்தான். ஆனால் பிராப்தி வேண்டாமா? நாம் என்ன செய்வது?

ஏதோ நாமும் சாப்பிடுகிறோம். ஆமாம்! தன் வயிற்றுக்கே தின்னாத கருமிகள் எத்தனைபேர் இல்லை? தனக்குப் போடுவதே தருமம், பெண்டாட்டிக்குப் போடுவது தானமாயிருக்கும் இந்நாளில் நம் வீட்டிலும் நாலுபேர் சாப்பிடுகிறார்கள். வெள்ளிக்கிழமை தவறினாலும் கோவில் அர்ச்சனை தவறுவதில்லை பிரதி தினமும் சாளக்ராம பூஜை பண்ணுகிறேன். ஏதோ சாப்பிட உட்காரும் வரை என்னால் முடிந்த வரை. நாலுபேர் மாதிரி பூணூலை முதுகு சொறியவும், சோப்பு அறுக்கவும் மாத்திரம் உபயோகிக்கிறேனா? ஞாயிற்றுக்கிழமை தோறும் திண்ணையில் உட்காந்து என் கையாலேயே ஒரு பிடி அரிசி பிச்சைக்காரர்களுக்கு அள்ளிப்போட வில்லையா? அதுவும் என் கையென்ன சின்னக்கையா? மடி ஆசாரம், ஜபம் வெச்சிட்டிருக்கேன். காசியிலிருந்து கன்யாகுமரி வரைக்கும் தீர்த்த யாத்திரை போயிருக் கிறேன். கோவில் குளம் என்று எவ்வளவு பணத்தை வாரியிறைத்திருக்கிறேன்! பண்ணிக்கொண்ட அத்தனை கலியாணங்களும் என் செலவில் தானே! வரதக்ஷணைக்கும்

ஆசைப்பட்டு பல்லையிளித்தேனா? இதைவிடப் பெருந் தன்மையாய் யாராலிருக்க முடியும்? இதையறிஞ்சவர் யார்?

ஆனால் ஒருத்தி அறிந்திருந்தாள். மாமியார் என்றால் எந்த மாமியார் என்று எனக்கே சந்தேகம் வந்து விடப் போகிறது! துளசியின் தாயார். அன்றைக்கு மாப்பிள்ளை யழைத்த பின், முகூர்த்தத்திற்கு முதல் நாளிரவு பெண்ணோடு பேசிக்கொண்டிருந்தாளே!

''ஏண்டி துளசி''— பக்கத்தறையில் பேசினது தலையிலி டிக்கிறமாதிரியிருந்தது, அந்த அம்மாவுக்கே குரல் கட்டை. ரகஸ்யமாய்ப் பேசறாளாம், சிரிப்பு வரது!

''ஏண்டி துளசி— உம்முணாமூஞ்சியாருக்கயே! நாமி ருக்கும் நிலையென்ன நிலவரமென்ன? உனக்கு அப்புறம் இன்னும் நாலு பெண் குதிராகக் காத்திண்டியிருக்குகள்! மங்கல்யத்துக்கு மஞ்சள் கயிறுகூட நமக்கு செலவு வைக்காமல் பண்ணிக்கறப்போ, இந்த மட்டுக்கும் அகப்பட்டதேன்னு இல்லாமே...!''

அதற்கு ஏதோ பதில் கிளம்பிற்று. ஆனால் காது கேட்கவில்லை. என்றைக்காவது கேட்டிருந்தால்தானே அன்றைக்கு கேட்கப்போகிறது! கையைப் பிடித்து வீட்டுக்குக் கூட்டி வந்ததிலிருந்து சாகறவரைக்கும் அப்படியேதானே!

மறுபடியும் மாமியார்— ''என்ன உத்தியோகம் பண்ணறான்னு தெரியுமா? இப்போதான் புதுசா சம்பளம் ஒசந்திருக்காம், உனக்கென்னடி குறைச்சல்? நகையும் நட்டும், பட்டும் பனாரிசுமா வாங்கி வாங்கி உன்மேல் அடுக்கப்போறான் பாரு! கூறைப்புடவையைப் பார்த்தையா துளசி? கண்ணைப் பறிச்சுண்டு போறதுடி! ஜரிகை உடம்பை அறுத்தூடுமேன்னுதான் கவலை— உம்? என்ன சொல்றே? ஊம்? சொல்வதை உரக்கச் சொல்லித் தான் அழேன்! ஒரு வழியா ஊமையாயிருந்துட்டால்

என் பெண் ஊமைன்னு சொல்லிவிடுவேன், அப்பவும் அவன் பண்ணிக்கத் தயார், அவ்வளவு நல்லவனா யிருக்கான்''— திடீரென்று— ''அடி போடி அசடே! என்னமோன்னு பார்த்தேன், அவனுக்கென்னடி குறைச்சல்? கூனா, குருடா ஊமையா? வியாதியா? ஆண் பிள்ளைக்கு ஏதுக்கடி அழகு?— ஆமா, நீ சிவப்பா யிருக்கையே—அந்தப் பெருமை தாங்க முடியல்லையாக்கும்! ஆனைகறுத்தாலும் ஆயிரம் பொன்னுடி! ஆள் கல்லாட்டம் இருக்கான் கடோத்கஜன் மாதிரி! அந்தக் கூட்டமே ஆயுசு கெட்டிடீ! அத்தோட அவனுக்குத்தான் செவ்வாய் தோஷம் இருக்கேயொழிய உன் ஜாகத்தில் இல்லே. அதனாலே தாலி கட்டிக்கறபோதே அடிச்சு விழாதே! (நான் கொஞ்சம் பூசினாப்போல்தான் இருக்கேன் அதற்காக கடோத்கஜன் என்கணுமா?). சரி அழுதூண்டேயிரு. அம்மா செத்துப் போயிட்டால் இப்படித்தான் அழுவேன் என்று அழுது காண்பிக்கிறையே அது வரைக்கும் ரொம்ப சந்தோஷண்டீ—''

ஆமாம், எரிச்சலாய்த்தான் வரும். வராதா கல்யாண வீட்டில் இப்படி மூக்கைச் சிந்திப் போட்டுக்கொண் டிருந்தால்? இதுகளையெல்லாம் கட்டிக்கலையென்று யார் அழறா? எல்லாம் அம்மா சொல்லைத் தட்டப்படாதுன்னு தானே?

''அப்பா, நான் செத்தால் சவுண்டிக்கு உன் தோல்மேல் ஒருத்தி தர்ப்பை பிடிச்சால்தான் நான் கரையேறுவேன்'' என்று தீர்த்துச் சொல்லிவிட்டாளே! தவிர, இதில் அம்மா சொல்லி ஆகவேண்டியதே என்ன இருக்கிறது? நமக்கும் சந்ததி வேண்டாமா? சந்ததிக்கென்று எத்தனை பேர் என்னென்ன பண்ணவில்லை? வியாசன்கூட, தாய் சொல்தட்டாது தம்பி மனைவிகளைக் கருவுறுத்த வில்லையா? அந்த உயர்ந்த தத்துவம் யாருக்கு இருக்கு? யாருக்குப் புரியப்போகிறது? இவள் அழகைப் பார்த்தா நான் இவளைக் கலியாணம் பண்ணிக்கொண்டேன்?

ஆனால் துளசி அழகி. அதுவும் எப்படிப்பட்ட அழகு! முன்னையே பெண்பார்க்கப் போயிருந்தபோது, அவளைப் பார்த்திருந்த போதிலும், அன்று பொலபொலவென விடி வேளையில் பரதேசிக் கோலத்திலிருந்து திரும்பினதும், அவள் உள்ளிருந்து மணக்கோலத்தில் வெளிப்படுகையில், உஷத்காலத்து தேவதையே, ப்ரஸன்மானாற்போல் அல்லவா இருந்தாள்! பளிங்கிலடித்த சிலை போன்றிருந்தாள். கடியாரத்துக்குள் அமுக்கி வைத்த எஃகுச் சுருள் போல், இருகாதண்டையும் மயிர் சுயமாகவே சுருண்டு, காற்று மூச்சில் என் மார்போல் படபடத்தது. அவள்மேல் போட்டிருந்த அணிகள் அழகுக்கு அழகு செய்வதுபோல் அர்த்தமில்லாமல் போய்விட்டன. தாழ்ந்த கண்களின்மேல் கவிந்த இமையும், படர்ந்த ரப்பையும் தூக்கவேயில்லை. எப்படித்தான் கலியாணம் முழுவதும், நம் கண்ணில் பட்டவரை அப்படியே தந்தப் பொம்மை மாதிரியிருந்தாளோ?

அன்னிக்கி மாத்திரமா, என்னிக்குமே, அவளோடு வாழ்ந்த பத்து வருஷங்களுமே, அப்படித்தானேயிருந்தாள்! நாளுக்கு நாள், பிறைச்சந்திரன் மாதிரி, கொஞ்சங் கொஞ்சமாய், ஏதோ கணக்கில், கண்பட எப்படியோ தேய்ந்து வந்தாள் வாயைத் திறக்கமாட்டாளா, மஹாராஜி! ஏதோ கேட்ட கேள்விக்குத் தலையை ஆட்டியே எப்படி காலத்தைக் கழித்தாள்? ஏன் பேசாமடந்தையா யிருக்கிறாய் என்று கடிந்தாலும், குபுகுபுவென்று முகத்தில் குங்குமம் குழம்புமே ஒழிய சண்டையாவோ சமாதானமாவோ வாயிலிருந்து ஒரு முத்து உதிராதா? இவளிடமிருந்து ஒரு வார்த்தைக்குக் கூட லாயக்கற்ற மஹாபாபியா நான்? ஊஹூம்! அவளாலேயே வீட்டில், நம் குரலே நமக்கு இரைச்சலாப் போச்சு.

ஆனால் வீட்டு வேலை செய்யாதவளா, கையா லாகாதவளா, பின்னால் வந்தவளைப் போல் கப்பியா? ஒரு நாளுமில்லை. அப்படிச் சொன்னால் சொன்ன வாய்

புழுத்துப் போகும். நன்றாய்த் தான் உழைத்தாள். மாமியாருக்கும் கொண்டவனுக்கும் செய்யும் பணிவிடையில் ஒரு குறைவில்லை. ஆனால் ஒன்றிலும் ஒட்டாது உணர்ச்சியின் சூடு இல்லாத உழைப்பிலோ பணிவிடையிலோ, அதை அடைபவருக்கு என்ன ருசியிருக்கிறது? சந்தோஷமாய்க் கை கொட்டி, கலகலவென்று வாய் திறந்து பல் தெரியச் சிரித்து ஒரு நாள்...? ஊஹூம்.

அவள் விபரீதம் தான். அவள் தாயார் செத்ததுக்கு அவள் போகவேயில்லை. அன்னிக்கு அழுது காண்பித்ததுக்கே அந்த அம்மாள் அவ்வளவு சந்தோஷப்பட்டாளே! அதற்காகாவது போக வேண்டாமோ? தீட்டு உண்டே என்று கூடப் பார்க்காமல் அன்றைக்கு தான் வடாம் பிழியற வேலையை இழுத்துப் போட்டுக் கொண்டு மாவைக் கிண்ட ஆரம்பித்து விட்டாள். ''என்னடி துளசி இப்படிப் பண்ணறே? செத்துப் போனது உங்க அம்மாதாண்டி! நீ போகாவிட்டாலும் உங்காத்து மனுஷா எங்களை என்ன சொல்லுவா?'' ஊஹூம்! அசைந்து கொடுத்தால் தானே?

''அப்பா என்ன தான் இருந்தாலும் உன் ஆம்படையாள் கடப்பாறை கக்ஷாயம் போட்டுக் குடிச்சவள் தான்'' என்று அம்மா சொன்னது சரியாப் போச்சு.

எல்லாத்துக்குமே அப்படித்தான். ஓட்டிற்குள் நத்தை போல் தனக்குள் ஒரு பத்ரம், ஒரு உணர்ச்சியும் காண்பிக்காத இந்த பொம்மையுடன் குடித்தனம் நடத்தி என்ன சுகத்தைக் கண்டேன்!

ஆனால் ஒரொரு சமயம்— யாரும் இல்லாத சமயத்தில் அவள் ஓட்டிலிருந்து அவள் வெளி வரும் வேளைகளில்... சில மாலைகளில் அவள் தோட்டத்தில் செடிகளண்டை தயங்கி நிற்கையில், மாடியிலிருந்து நான் அவளை கவனிக்கையில், அவள் அழகு அமானுஷ்யத் தன்மையைப்

பெற்று— பிரமிக்கத்தக்கதாயிருக்கும். உள்ளத்தில் இம்சை கிளறும், இன்னும் சற்று கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்தால் கரைந்து விடும் கானலோ என்று கூட மனம் திகைக்கும். கதையில், நந்தவனத்தில் ராஜகுமாரி போல், அவள் எதற்காக, எதை எதிர்பார்த்து அப்படி நின்றாள்?

இன்னொரு சமயம், ஒரு நாளிரவு நடு நிலவு. அன்று பௌர்ணமி. இறுக்கம் தாங்க முடியவில்லை. தூக்கம் வரவில்லை. மாடியில் திறந்த வெளியில் சற்று உலாவலாம் என்று வந்தால், அங்கு உட்காந்து முகத்தைக் கையில் புதைத்து, அழுது கொண்டிருக்கிறாள். தலைமயிர் அவிழ்ந்து தரையில் புரள்கிறது. அன்னிக்குத்தான் அடிவயிற்றில் 'பகீர்' என்றது. இதென்னடா கிரஹசாரம்! ஏதாவது யக்ஷிணியைக் கட்டிக்கொண்டு விட்டேனா? இது மாதிரி தான், நடுராத்திரியில், நடுநிலவில், பாட்டையில், அதுகள் அழகான ரூபம் எடுத்து அழுது கொண்டிருக்குமாம். அனுதாபப்பட்டு பக்கத்தில் போகிறவர்களை அடித்துவிடுமாம்— ஓசைப்படாமல் பின்வாங்குவது தவிர நான் வேறு என்ன செய்ய முடியும்?

அடுத்தநாள் அதைப்பற்றி— இதைப்பற்றி அவளைக் கேட்கவே அச்சமாயிருக்கிறது. வெறும் பேச்சுக்கே பூனையைப் பார்த்த எலி போல உடம்பெல்லாம் வெட வெடவென்று உதறுமே, இதற்கா பதில் சொல்லப் போறாள்?

எல்லாம் போகட்டும், நான் என்ன சிங்கமா, புலியா, கரடியா. மனுஷ்யன் தானே! எதிலே குறைச்சலாயிருக்கிறேன்? புத்தியில் குறைச்சலா? ஆபீசில் என் வார்த்தைக்கு எவ்வளவு மதிப்பிருக்கிறது! நான் காண்பித்த இடத்தில் கண்ணை மூடிண்டு துரை கையெழுத்துப் போட வில்லையா? காரியசாதனையில் குறச்சலா? அல்லது பணத்தில் குறைச்சலா? இன்னிக்குத் தேதியில் நான் கண்ணை மூடினால் மரணபண்டு பத்தாயிரம் அவளைச் சேராதா? இதைவிட ஒரு புருஷன் ஒரு பெண்டாட்டிக்கு

என்ன செய்யமுடியும்? நான் சாகிறதுக்கு முன்னால் அவள் செத்தால், அது என் தப்பா? அல்பாயுசுக்கட்டை, அல்பாயுஸ்!

ஒரு தினுசில் அவள் கொடும்பாவிதான். அவள் கர்ப்பமா இருக்கையில் அவள் எண்ணத்தை யார் கண்டார்கள்? அத்தனை நாள் கழித்து, என்னவோ எதிர்க்க வலுவற்றதால் அல்ல, முற்றுகையின் நீடிப்புக்கு அலுத்துப் போய் கோட்டை சரண் அடைந்தது போலன்றி, உள்வேகமில்லை.

மூன்று மாதமாய் அவள் ஸ்நானம் பண்ணவில்லை என்று நிச்சயமானதும் பாவம், அம்மாவுக்குத்தான் சந்தோஷம் தாங்க முடியவில்லை. ஆனால் எனக்குத்தான் சுவாரஸ்யப்படவில்லை. சப்பென்றிருந்தது. அவள் மாறினால் தானே! "எல்லாம் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தால் சரியாய்ப் போயிடும். பொம்மனாட்டிகளே அப்படித் தாண்டா" என்று அம்மா தைரியம் சொன்னாள் என்றாலும் அவள் என்னவோ உலகத்தையே தன் உதரத்தில் அடக்கினதைப்போல், என்ற மாதிரி தனக்குள் தானே பத்திரமாயிருந்தாள்.

பிரசவம் கூடியவரையில் செவ்வையாத் தானே நடந்தது! குறைமாசத்தில் ஆகியும், பிரசவம் சுகப் பிரசவம்தான். குழந்தைதான் என்னவோ மாவுப் பொம்மை மாதிரி... முதல் எட்டு நாள் வரை ஒரு தொந்தரவுமில்லை. எட்டா நாள் ராத்திரி லேசாய் உடம்பு சுட்டது. ஏதோ பால்கட்டு ஜுரம் என்று நினைத்தது. விடியற்காலை வேளையில் துளசி எவ்வளவு அழகாய் இருந்தாள்!

காலை எட்டு, எட்டரையிருக்கும். "அத்தை, தாகம் தொண்டையை வரட்டறது" என்றாளாம். "இரு, பார்லித் தண்ணி போட்டிருக்கேன் சுடவெச்சுக் கொண்டு வரேன்" என்று அம்மா சமையலுள் உள்ளே போனாள்.

அதற்குள் அவசர அவசரமாய் எழுந்து வெளியே வந்து குழாயண்டை போய் சொம்பு பச்சை ஜலத்தை மடக் மடக்கென்று குடித்து விட்டாள். குடித்துவிட்டு அவள் சொம்பைக் கீழே வைக்கறதுக்கும் இப்பொ மாதிரி யிருக்கிறது— அம்மா சமையலறையிலிருந்து வெளியே வந்து இந்தக் கோலத்தைப் பார்த்துவிட்டு கன்னத்தில் அறைந்து கொண்டு நிக்கறதுக்கும் நான் பத்தியத்துக் கென்று பிஞ்சு கத்திரிக்காயா பார்த்து வாங்கி உத்தரி யத்தில் முடிச்சுப் போட்டுக் கொண்டு உள்ளே நுழையறதுக்கும்—

''துளசி! என்ன காரியண்டீ பண்ணினே?—''

''இல்லே அத்தை, தாகம் தாங்க முடியல்லே— சொம்பைக் கவிழ்த்து வெச்சிருக்கேன். தண்ணியைத் தெளிச்சு எடுத்துக்கோங்கோ.' அமைதியாய் நடந்து போய் படுக்கையில் படுத்தவள்தான். அப்புறம் எழுந்திருக் கவேயில்லை. அன்று பகலும், இரவும் அந்த உடம்பில் காய்ந்தது ஜுரமா, நெருப்பா? அனல் வீச்சு பக்கத்தில் அண்டவிடல்லியே! என்னென்னவோ வைத்தியம் பண்ணி னேன். புலிப்பாலையே கொண்டு வந்தேன். என்னத்தைப் பண்ணி என்ன? சாகவே தீர்மானம் பண்ணிவிட்ட வளுக்கு சஞ்சீவி மருந்தைக் கொண்டு வந்துதானென்ன? அதுவேதான் அவளுக்கு விஷம். அப்படித்தான் நான் அவளுக்கு என்ன தீங்கு இழைத்து விட்டேன்? விடிந்ததும் கூப்பிட்றா பிராம்மணாளை, கொண்டு வாடா மூங்கிலைத்தான்!

முகமாற்றமாய் குழந்தையாவது தங்கிற்றா? எப்படித் தக்கும்? பிறக்கும்போதே பூனைக்குட்டி மாதிரிக் கத்திற்று; தாய்ப்பாலுமில்லை. கொடுக்கவே மறுத்துவிட்டாள். எட்டாம் மாதம் தொட்டில் ஏறாது என்று சும்மாவாச் சொன்னார்கள்?

போதுமடா போதும் அழகைக் கட்டிக்கொண்டு அவஸ்தைப்பட்டது போதும் போதும். அழகின் திக்குக்கே ஆயிரம் சலாம்!

தருமி இருந்தாளே, கன்னிகாதானமாய்ப் பெற்று மூத்தாள், தர்மபத்னி உண்மையான சகதர்மிணி, அவளிடம் இந்த சங்கடமெல்லாம் கிடையாது. ஆள் என்னவோ மத்தளம் மாதிரிதான் இருப்பாள். மூக்குமுழி கிடையாது. சூதுவாதும் கிடையாது. மனசில் எதையும் பொத்தி வைக்கவே தெரியாது. மெதுவாய்ப் பேசினாலே கூடம் அதிரும், கருவேப்பிலைக்காரிக்கு ஒரு கையரிசி போட்டு விட்டு இன்று முழுக்க கொசுறிக் கொண்டிருப்பாள். ''விட்டுடேன்!'' என்று ஒரு வார்த்தை சொல்லிவிட்டால் போதும். ''காசின் அருமை உங்களுக்கென்ன தெரியும்?'' என்று கையை நீட்டிக்கொண்டு நம்மோடு சண்டைக்கு வந்து விடுவாள். இருந்தால் என்ன? அதிர்ஷ்டசாலி அவள் வந்துதான் வீடே விளங்க ஆரம்பித்தது நமக்கும் உத்தியோகம் வளர்ந்தது. அவளுக்கு வேணுமானால் அதிர்ஷ்டமில்லை. பிறந்தும் ஒன்றும் தக்கவில்லை. குழந்தைகளைக் கண்டாலே எவ்வளவு ஆசை! என்ன அருமையாய் சமைப்பாள்! அந்த எலுமிச்சபழ ரஸம் ஒண்ணே போதுமே, சின்ன விஷயங்களிலே சிறு மனசாயிருந்தாலும்!

கடைசியில் அதுதான் அவள் உயிருக்கு உலை வைத்தது. ஆனால் விதி என்று ஒன்று இருக்கிறது என்று வெச்சுக்கோ. ஊசிப் போன பண்டங்களிலேயே அவளுக்கு ஒரு தனி ருசி. ''சாஸ்திரி பொண்ணே, இங்கே நன்னா சாப்பிடலாண்டி'' என்றாலும் கேட்க மாட்டாள். ''உங்களுக்கென்ன தெரியும் இளம் ஊசலுக்கே ஒரு ருசி. எனக்கு இப்போ ஆசாரமா, ஜபம் கிபம் தட்டுக் கெட்டுப் போறதா? சாமானை வீணாக்க எனக்கும் மனசாகாது'' என்று ஒரே அடி அடித்து விடுவாள்.

''ஏன் மிஞ்ச வைக்கணும்? கொஞ்சமாய்ப் பண்றது''— என்றால் வந்தது ஆபத்து.

''ஏன், நான் நிறையத் தின்கறேனே என்று வயிறெரியறதா?'' என்று ஏதாவது ஆரம்பிப்பாள். இந்த ஏடா கோடத்துடன் என்ன செய்வது?

வீட்டில் ஏதாவது விசேஷ தினம் வந்தால் அவளுக்குக் கொண்டாட்டம். மூணு நாளைக்கு மிச்சங்களை எரியப் போட்டுத் தின்று கொண்டிருப்பாள்.

கடைசியில் அப்பா திவசக் காய்கறிகள்தான் அவளைக் கொண்டு போய் விட்டன. வேளையும் வந்து விட்டது வெச்சுக்கோ. சுண்டாங்கியைத் தின்று விட்டு இரண்டு தடவை பேதியாகி அப்புறம் அதிஸாரத்தில் கொண்டு விட்டு விட்டது.

பாவம்! இருந்த வரைக்கும் அவளுக்கு மிஞ்சித்தான் மற்றதுகள். காசின் அருமை நன்றாய்க் கண்டவள். கணக்காய் போகவர ஜேபியில் பஸ்ஸுக்கும், வெற்றிலைக்கும்தான் சில்லறை போட்டு வைப்பாள் . கையில்தான் பொட்டலமும், ப்ளாஸ்க்கும் கட்டிக்கறோமே!

நம் ஆம்படையான் பெரிய உத்தியோகம் பண்றான் என்ற எண்ணம், பெருமை அவள் ஒருத்திக்குத்தானிருந்தது. ஆசையாய்க் கோட்டை மாட்டிவிட்டு வெற்றிலை மடித்து கையில் விரலுக்கிடுக்கில் கொடுத்து, சந்துமுனை திரும்பும் வரை, கதவுக் கம்பியைப் பிடித்துக் கொண்டு வாசலிலேயே நின்று கொண்டிருப்பாள். நெற்றியில் மஞ்சள் பற்றி அதில் அரையணா அகலத்துக்கு குங்குமம் ஜ்வலிக்கும். எனக்குத் தலைவலியென்றாலும் தாங்கமாட்டாள்.

உம்— ம்— எல்லாம் போச்சு, நானும் அந்தக் காலத்தில் இன்னமும் கொஞ்சம் வயசு குறைஞ்சு இதைவிட முடுக்காய்த்தானிருந்திருப்பேன். இப்பவோ,

நமக்கு வயசாயிடுத்து. உடம்பு தளர்ந்து விட்டது. அம்மாவும் போயிட்டாள். நம்மை கவனிக்கறதுக்கு ஆளில்லை. இப்போ குட்டியைக் கட்டிண்டதே அதுக்காகத் தானே! இல்லாட்டா இனிமேல் குழந்தை பெறப் போறோம் என்றா?

குட்டி மனுஷாளுக்கெல்லாம், தத்து பித்து எண்ணங்கள் கிடையாது. அவாளுக்கு நன்னா தெரியும் நான் செத்தபிறகு சொத்தெல்லாம் குட்டிக்குத்தான் என்று. பாவம், ஊசக்குழம்பெல்லாம் சாப்பிட்டு தருமி சேர்த்து உசிரையே கொடுத்த சொத்து! நமக்கும் இன்னும் எத்தனை நாள்! ஆச்சு போச்சு. கைகாட்டி சாய்ந்தாச்சு. இன்னும் கொஞ்சம்தான் பாக்கி.

குட்டியும் நன்னா சமைக்கிறாள்— ஏதோ இருக்கும் வரை பிரியமாயிருக்காள். இந்த வயசில் எனக்கு இதைவிட என்ன வேணும்? இன்னும் கொஞ்சம்தான் பாக்கி.

உஸ்...ஸ்... தூக்கம் கண்ணை அயட்டறது... உண்ட களைப்போன்னோ, இப்படியே திண்ணையில் சாய்வோமா......?

குட்டி...வத்சலை... துளசி...த...ரு...மி!...உ...ர் ர்...ர் ர் ... கொர் ர் ர்.........

# 10. சாட்சி

சின்ன வயதின் விளையாட்டு ஒன்று இப்போது ஞாபகம் வந்தது.

"தட்டாமாலை தாமரைப் பூ
தட்டாமாலை தாமரைப் பூ
சுற்றிச் சுற்றிச் சுண்ணாம்பூ— "

தலையின் தனிக் கிறுகிறுப்பில் அவனைச் சுற்றி இருந்தவையும் இருந்தவரும் பொங்கி வடியும் அலைபோல் மேலும் கீழும் மிதந்து ஆடினர்.

அவன் சிநேகிதர்கள் கூத்தும் கொம்மாளமும் அடித்துக் கொண்டு இருக்கிறார்கள். 'பார்ட்டி' ஒரு தினுசான கட்டத்துக்கு வந்து விட்டது. வாயிலிருந்து புறப்பட்டதற்கெல்லாம் சிரிப்பு. நன்கு ஆராயின், அவ் வார்த்தைகளில் உப்புப் புளி இருக்காது. இதற்கா இவ்வளவு சிரித்தோம் என்று வெட்கமாய்க்கூட இருக்கும். ஆனால் இப்போதோ—

"என்னாப்பா, மிஸஸ்ஸைக் கூப்பிடுப்பா! கட்டிண்ட வுடனே அடுப்பங்கரையில் பூந்துட்டாங்களா?"

இதுக்கு ஒரு அவுட்டுச் சிரிப்பு.

"அவங்க ஜாதியிலேயே அதானே ஒரு நியூஸென்ஸ்!" உடனே ஒரு கொக்கரிப்பு.

இதற்குள் ஒருவன் ஆக்ஷேபிப்பது போல், "நல்லா இருக்கையா! நம்ம எல்லாம் என்ன வேற்று மனுசங்களா? ஆபீஸ்தானே?"

"யாருக்கு"

"ரெண்டு பேருக்குந்தான் சொல்றேன்"

"எப்பவும் அப்படியே இருக்குமா? இனிமே 'மிஸஸ்' ஆபிஸுக்கு வருவாங்களா?"

"ஏன், ரெண்டு பேருமா சம்பாதிச்சா நோவுமா?"

"இதென்ன, கல்யாணமா, கூட்டு வியாபாரமா?"

ஒரே ஆரவாரம். இம்மாதிரிப் பேச்சு வாய்க்கு வாய் யந்தாடியவண்ணமிருந்தது. அவன் வாயில் சிரிப்புக் கலையவில்லை; கழுத்தில் கட்டிய 'டை', நெற்றியிலிட்ட பொட்டு மாதிரி, வாய்க்குத் தரித்த அணியாகப் பதிந்து போயிருந்தது.

"தட்டாமாலை தாமரைப் பூ, சுற்றிச் சுற்றி......"

அப்புறம் எல்லாம் முடிந்து அவன் சிநேகிதர்கள் ஒவ்வொருவராக வந்து செலவு பெற்றுக்கொள்ளும் முறையில் கையைப் பிசைகிறார்கள்.

"ரொம்ப நேரமாய்ப் போச்சு. சந்தோஷமாய்ப் போச்சப்பா—"

"பாதம் கீர் ஏ ஒன்!"

"அட, எது சோடையாயிருந்தது? ரஸம்— ?"

"சரி சரி, இவன் வாயிலே புனல் வெச்சு இன்னும் ரெண்டு அண்டா கொண்டு வந்து ஊத்தடா—"

போயிட்டு வரோம். நீயும் மிஸஸ்ஸும் ரொம்ப நாள் சௌக்கியமாய் இருக்கணும். Good Luck!"

எல்லோரும் போக இன்னும் ஒருத்தன் தான் பாக்கி. அப்பா! மழை பெய்து விட்டாற்போல்......

''சரி, ஒரு வகையாக எல்லாம் முடிந்தது!''

''ஆரம்பித்தது என்று சொல்லு!''

அவன் நண்பன் சிரித்தான். ''வாஸ்தவந்தான். ஆரம்பித்ததா?''

''ஏதோ உன் புண்ணியத்திலே—''

''என்னிடம் என்ன இருக்கிறது? உங்களிருவர் எண்ணத்திலேயும் என்று சொல்லு புண்ணிய பாவம் முக்கியமில்லை. எண்ணம்தான முக்கியம்.''

''அதுவும் சரி.''

''இருந்தாலும் எல்லோரும் சட்டென்று செய்யாத காரியத்தை செய்து விட்டாய். நீ தைரியசாலிதான். நான் என்னவோன்னு நினைச்சேன்.'' அவன் நண்பனின் புகழ்ச்சி குளிர்ச்சியாய் இருந்தது. மனம் பெருமிதம் கொண்டது.

நான் யாருக்கப்பா பயப்படணும்? என்னை குற்றஞ் சொல்ல சுற்றுமுற்று எந்த உறவு தட்டுக் கெட்டுப் போச்சு? அத்தோடு இந்தக் காலத்தில் இது அதிசயமா?''

''அதுவும் சரிதான், இது மாதிரி நோக்கங்கள் இருப்பதும்.''

''நோக்கங்கள் மாத்திரம் இருந்து என்ன பிரயோசனம். காரியத்தில் காண்பிக்காமல்?''

அவன் நண்பன் புன்னகை புரிந்தான்.

''நோக்கம் வேறு. காரியம் வேறு. இன்னும் பார்த்தால் ஒன்றுக்கொன்று சம்பந்தங் கூட இல்லை என்று சொல்வேன்.''

''அதென்ன அப்படிச் சொல்லிவிட்டாய்?''

''இப்போ என்ன அதைப்பற்றி? ரொம்ப நேரமாய் விட்டது. பஸ் கூட அகப்படாது என்று நினைக்கிறேன். கால்நடைதான். நாளைக்கு என்ன, ஆபீஸ் மட்டமா?''

"இல்லை இல்லை—"

வாசற்கதவைத் தாளிட்டு கூடத்துக்கு வந்தான். நண்பர்கள் அவனுக்கு அளித்த பரிசுகள் மேஜைமீது கொலுவிருந்தன. அவைகளைச் சிந்தித்தபடி சற்று நேரம் நின்றான். ஒன்றிரண்டில், அளித்தவனின் குறும்பு மிளிர்ந்தது.

சந்நேக ரஸம் தட்டு ஒன்றிரண்டு புத்தகங்கள். ஒரு 'க்ளாக்ஸோ' பீடர் புட்டி வெள்ளித் தகடு அடித்த சங்குப் பாலாடை இப்பவே!

ஒவ்வொன்றாய்க் கண் பாய்கையில் ஒரு வெள்ளிக் கிண்ணம் கவனம் கவர்ந்தது. கையில் எடுத்தான். நல்ல கனம். அடியில் பாதம் வைத்து, விளிம்பில் எதிருக்கெதிர் இரண்டு வாய்கள். வெளிப்பக்கத்தில் நல்ல வேலைப்பாடு கள். வாயில் ஊன்றிப் போன சிரிப்பு மாறாது, அதைக் கையில் எடுத்துக்கொண்டு மாடியேறினான்.

ஜன்னல் கம்பிகளின்மேல் சாய்ந்து ஜன்னலின் விளிம்பில் உட்கார்ந்திருந்தாள். அவன் அரவம் கேட்டு, முகம் திரும்பி அவனைக் கண்டு மலர்ந்த புன்னகையில் யோசனை தயங்கிற்று.

மேஜை மேல் கிண்ணத்தை வைத்து விட்டு அவளிடம் வந்தான். அவன் முகத்தைச் சிரிப்பு இன்னமும் அழுந்த உழுதது. அவள் மௌனமும் முறுவலும் கலையாது எழுந்து நின்றாள்.

"எப்படி இருக்கிறது?" அர்த்தமற்ற அசட்டுக் கேள்வி யைக் கேட்ட பிறகுதான் தெரிந்தது, எவ்வளவு அர்த்த மற்ற அசட்டுத்தனமானது என்று. அதை மறைக்க, மேஜையண்டை போய், அதில் எரிந்து கொண்டிருந்த ஊதுவத்தியின் தணல் மேல் சாம்பலைத் தட்டினான். உடனே அவன் கையோடு கொண்டு வந்த கிண்ணம் பார்வையை ஈர்த்து, கூஜாவிலிருந்த பாலை அதில் விளிம்பு கட்ட ஊற்றினான்.

''இங்கே வா.''

அசைந்தாடி அவனை நோக்கி வந்தாள். மேஜை யொட்டிச் சாய்ந்தாற்போல் உட்கார்ந்து இடுப்பில் ஒரு கையை ஊன்றி இன்னொரு கையால் கிண்ணத்தின் செதுக்கல்களை வருடினாள். இன்னமும் ஏதோ யோசனை யில்தான் இருந்தாள்.

''நன்றாயில்லை?''

ஆமெனத் தலை ஆட்டினாள்.

''எதிரும் புதிருமாய் இரண்டு மூக்குகள் ஒரே சமயத்தில் எனக்கு ஒன்று, உனக்கு ஒன்று— ''

அவள் முகம் சிவந்தது; ''போதுமே—!''

''நான் விளையாடவில்லை— '' உணர்ச்சிப் பெருக்கில் அவன் முகம் சிவந்தது ''புரியவில்லையா? வாழ்க்கையின் கோப்பையிலிருந்து ஸ்திரியும் புருஷனும் ஒரே சமயத்தில் பருக... ''

பேசிக் கொண்டிருக்கையிலேயே தொடர் மறைந்தது, அவள் முகத்தில் கவிந்த சிந்தனையைப் பார்த்ததும்; ஏன், இருவருமே இதற்கு முன்னரே வாழ்க்கையின் கோப்பை யில் பருகியவர்தானே! அதே எண்ணம் அவளுக்கும் தோன்றி விட்டது என அவள் முகத்தை மின் வெட்டிய சுளிப்பில் அறிந்தான். தன் அசம்பாவிதத்தை உடனே உணர்ந்தான். அதை மறைக்க, அவளைத் தழுவினான். அவன் அணைப்பில் அவள் உடல் குலுங்கிற்று. ஒரு விம்மல் கிளம்பிற்று.

''சே, சே, இப்போ என்ன நேர்ந்து விட்டது?''

''ஒண்ணுமில்லை— '' என்று விக்கினாள்.

வெள்ளப் பெருக்கில், மேல் அடித்துக் கொண்டு வரும் குப்பைக் கூளம்போல், மனம் கரைந்து ஓடுகையில், வாயில் என்ன வார்த்தைகள்தாம் வந்தன தெரியவில்லை.

"என் மனைவியே—"

"இல்லை இல்லை—" பதறி, அவன் பிடியினின்று விடுவித்துக் கொண்டு எட்ட நின்றாள். அவள் முகம் வெளுத்தது.

"என்ன இல்லை?"

"ஒன்றுமில்லை; என்னை பேரிட்டே கூப்பிடுங்கள்."

எட்ட எட்ட, ஒருவரை ஒருவர் பார்த்துப் பதுங்கி நிற்கும் நிலை அவனால் சகிக்க முடியவில்லை. தலை கிறுகிறுத்தது.

"தட்டாமாலை தாமரைப்பூ
சுற்றிச் சுற்றிச் சுண்ணாம்பு
கிட்ட வந்தால் குட்டுவேன்
எட்டப் போனால் துப்புவேன்."

மறுநாள் ஆபிஸுக்குப் போய் தன் இடத்தில் அமர்ந்தான். எதிரே தான் அவள் "ஸீட்" காலியாக இருந்தது. இன்றிலிருந்தே காலிதான், அந்த இடத்துக்கு வேறு யாரையேனும் வைக்கும் வரை.

பள்ளிக்கூடத்துச் சிறுமிபோல், தலையை ஒரு பக்கமாகச் சாய்த்துக் கவிழ்ந்தபடி அவள் வேலை செய்யும் உருவம் நினைவுபடுத்திக் கொள்கையில் சிரிப்பு வந்தது.

ஒரு நாளும் ஆபிஸுக்கு அவள் நேரத்தில் வந்ததில்லை. ஐந்து நிமிஷமாவது தாமதித்துதான் வருவாள். அப்பழக்கத்தை அவனால் குணப்படுத்த முடியவில்லை. வந்த புதிதில் அவளிடம் இதைப்பற்றிச் சுறுசுறுப்பாய்த் தான் பேச நேர்ந்தது. எதிர் வார்த்தையே பேசாது, சமாதானமும் செல்லாது. கண்ணீரும் கம்பலையுமாக அவள் நின்ற காட்சி இப்போது கண்முன் நின்றது. வெள்ளை மேலாக்கியின் ஓரத்தில் மசிக்கரை. அப்புறம் அவள் நேரம் கழித்து வருவதற்கு தானே அவளை

மன்னிப்புக் கோரும் தினுசில் சமாதானப்படுத்துவதே பாடாகி விட்டது.

“பொம்மனாட்டிகளை வேலைக்கு வைத்துக் கொள்ளக்கூடாது என்று சொன்னாலும் நம் முதலாளிகள் கேட்க மாட்டேன் என்கிறான்கள். இவர்கள் வேலையும் செய்ய மாட்டார்கள், இவர்களை ஒன்றும் சொல்லவும் முடியாது.

அப்போது அவனுக்கு அப்படித் தோன்றினாலும், அவளை அலுத்துக் கொள்ளும்படி நேரவில்லை. அவள் வேலை சுத்தம்தான். இருக்கும் வரை இடத்தைவிட்டு நகராமல், சாயங்காலம் மணி வேளைக்கு குடையை எடுத்துக்கொண்டு கிளம்பிவிடுவாள். சில சமயங்களில் தான் சிற்றுண்டி வரவழைத்துச் சாப்பிடுகையில் எதிரே அவள் உட்கார்ந்திருப்பதால் அவளுக்கும் வரவழைக்கும் படி நேரும் அப்போதும் ‘வேண்டாம்’ என்று வீண் ‘பிகு’ பண்ணிக்கொண்டதுமில்லை.

வேலை நேரம் தவிர, அவளை அங்கு, இங்கு, தெருவில். சினிமாவில் என்று வேறு எங்கேனுமோ பார்த்த நினைவு இல்லை. ஏதோ வருவாள், வேலையை அமைதியாகக் கவனிப்பாள், போவாள்; அவ்வளவுதான் அவளைப்பற்றி அவனுக்குத் தெரியும். ஆனால் ஐந்து நிமிஷமோ, பத்து நிமிஷமோ, எப்பவும் ‘லேட்.’

ஒரு நாள், பஸ் சக்கரத்தில் காற்று இறங்கிவிட்டது.

டிராம் வண்டி நடுவழியில் நின்றுவிட்டது.

இன்னொரு நாள், ஏதோ சின்ன எதிர்பாராத வேலை.

ஒரு நாள், இத்தனையும் சேர்ந்து இருக்கும், “சரி. இன்னிக்கென்ன?” என்று சிரித்துக் கொண்டே கேட்பான். வேடிக்கையாய் சளைக்காமல் அவளும் ஏதாவது பதில் சொல்வாள். அம்மாதிரி சமயங்களில் அவள் முகத்தின்

சிந்தனை குறைந்து அதில் இளமை கூடத் தோன்றும் சந்தோஷமாக இருக்கவே அஞ்சினாளோ?

ஆனால் அவளைப் பற்றி அவனுக்கு என்ன?

அப்புறம் ஒரு நாள் அவன் இடத்திற்கு வந்தாள். நேர்ப் பார்வையாக அவனைப் பார்க்காமல், மேஜைமேல் ஒரு பேனாக் கட்டையை நிற்க வைத்துக்கொண்டே:

''எனக்குப் பத்து நாள் லீவு வேணும், தொண்டையில் சதை வளர்ந்திருக்கிறது. ஆபரேஷன் பண்ணிக் கொள்ளணும் என்று டாக்டர் சொல்கிறார். ஆஸ்பத்திரியில் பத்து நாளாவது இருக்கவேண்டி வருமாம்'' என்றாள்.

லீவை வாங்கிக் கொடுத்தால் மட்டும் ஆகிவிட்டதா? மரியாதைக்கு ஒரு தரமேனும் ஆஸ்பத்திரியில் போய்ப் பார்க்க வேண்டாமா? அத்துடன் அவனுக்குந்தான் ஆபிஸ் விட்டதும் வெட்டி முடிக்கும் வேலைதான் என்ன இருக்கிறது? வீட்டில் எவள் காபியும் டிபனுமாய்க் காத்துக் கொண்டிருக்கிறாள்? எந்தக் குழந்தை 'எனக்கு பிஸ்கோத்து வாங்கிண்டு வந்தையாப்பா?' என்று காலைக் கட்டப்போகிறது?

அவள் லீவு எடுத்த இரண்டு நாட்களுக்கெல்லாம், ஆஸ்பத்ரி விலாசத்தை லீவு மனுவிலிருந்து தெரிந்து கொண்டு ஆபீஸ் விட்டதும் அவளைக் காணச் சென்றான். அவள் இருந்த ஸ்பெஷல் வார்டைக் கண்டுபிடிக்கவே நேரமாயிற்று. கடைசியாக அந்த அறையுள் நுழைகையில், அவளை அப்போதுதான் 'ஆபரேஷன் வார்டி'லிருந்து 'ஸ்ட்ரெச்சர்' வண்டியில் கொண்டு வந்திருந்தார்கள். மயக்க மருந்தின் போதை இன்னும் தெளியவில்லை. இரண்டொரு வேலைக்காரர்கள் அவளைச் சுற்றி நின்றிருந்தார்கள்.

அவனைப் பார்த்தும் அவர்களில் ஒருவன் ''என்னாங்க? இவங்களை பார்க்கத்தானே வந்தீங்க?

அப்படின்னா ஒரு கை கொடுங்க. என்ன மயங்றீங்க? இங்கே அதெல்லாம் பார்த்தா ஆவுங்களா? தலையையும் இடுப்பையும் சேர்த்தாப் போலப் பிடீங்க! தலையைத் தொங்கவிடாதீங்க... ஆ!... அப்படித்தான்!''

அவன் உதவியுடன், அவளைப் படுக்கையில் கிடத்தினார்கள். ''இந்த ஐஸ்'' தண்ணியை அப்போதைக் கப்போ ஒரு ஒரு ஸ்பூனாய் வாயிலே விடுங்க, நாக்கு வறட்டாமே— நாங்க போறோம்!''

அவள் இன்னமும் கண் விழிக்கவில்லை. ஜலத்தை அவள் வாயுள் உட்ட முயன்றான். அரை மயக்கத்தில், ''டாக்டர், டாக்டர்! ஊசியைப் போட்டுக் குத்தாதேயுங்களேன்'' என்று தேம்பினாள்.

அவனுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. காது, மூக்கு, கழுத்தில் இருந்தவையெல்லாம் கழற்றிவிட்டு, முகமும் வெளுத்து, வசமுமிழந்து இப்பொழுது அவள் கட்டிலில் கிடக்கும் நிலையில், அவளைவிட அபலை உண்டா? ஜன்மத்தின் அகதிக்கே அடையாளமாய்.

அந்நிலைமை தூண்டியேதானோ, அவனாவே மறுநாளும் ஆஸ்பத்திரிக்குச் சென்றான். பலஹீனம் தெளியவில்லை; முகம் தெளிந்திருந்து கட்டிலில் சாய்ந்திருந்தாள். அவள் கண்கள் அவனை வரவேற்றன. தொண்டைப்புண் பேசவொட்டவில்லை. மடியில் ஒரு நோட்டுப் புத்தகமும் பென்சிலும் கிடந்தன.

நாற்காலியை நகர்த்திப் போட்டு அவளருகே உட்காந்தான். சுபாவத்திலேயே சற்று ஒட்டிய கன்னங்கள். ஆனாலும் முகத்தில் எடுப்பான நெற்றியிலிருந்து கீழிறங்கும் அவைகளின் தீர்மானமான கோடுகள் சிறப்பாயிருந்தன. கண் ரப்பை மயிர்கள் நீண்டு, நுனி சுருண்டு, விழிகளுக்கு ஒரு அழகுச் சோகத்தையும் கனவுப் பார்வையையும் அளித்தன. மூக்கு சற்று நீளம் தான். பற்கள் வரிசையாய்ப் பளீர்வெண்மையுடன்

பிரகாசித்தன. இத்தனை நாள் பழகியும், இந்த வசீகரம் ஏன் இதுவரை புலப்படவில்லை? அதற்கு வெளிப்பட சமயம் சந்தர்ப்பம் இடம் எல்லாம் வேணும் போலும்! ஆபீசில் எல்லோரும் ஒரே யந்திரமாய் நகருகையில் என்ன தெரிகிறது? கண்ணிருந்தும் குருடாய், காதிருந்தும் செவிடாய், உணர்விருந்தும் கட்டையாய்... புன்னகையுடன் நோட்டுப் புத்தகத்தை அவனிடம் நீட்டினாள். அதில் ஏதோ எழுதி இருந்தது.

''நீங்கள்தானே நேற்று என்னைக் கட்டிலில் எடுத்துப் போட்டீர்கள்?''

அதைப் படித்ததும் அவனுக்கு அதிர்ச்சி கண்டது. ஏன் தெரியவில்லை. வாய் வார்த்தையாக அவள் கேட்டிருந்தால் கூட கேள்விக்கு அவ்வளவு வேகம் இருந்திருக்குமோ? ஆனால் எழுத்துப் பூர்வமாக அக்கேள்வி அவனை எட்டிப் பார்த்ததும் அது பல பூட்டுக்களின் ஒரு சாவி போல், பல கேள்விகளின் ஓர் உருவாய்த் திகழ்ந்தது. திடீரென்று அவனை சாட்சிக் கூண்டில் ஏற்றியது போல் ஒரு பயம் உண்டாயிற்று.

அவ்வினா நன்றி அறிவித்ததா? அல்லது கண்டித்ததா? அல்லது அவளை அவன் தொட்ட உரிமையை அறிய முயன்றதா? அல்லது அந்தக் காரியத்தின் சரிதத்தை ஆராய முனைந்ததா? இத்தனை அர்த்தங்களும், இதற்கப்பாலும், மனம் கண்டும் காணாதும் உணரும் கேள்விகளும் அவைகளுக்குப் பதில்களும் தன்னுள் அடக்கிய வினா.

அவனுள் கிளர்ந்த எழுச்சியை மடக்கவோ, தனக்குத் தானே அறிந்து கொள்ளக்கூட அவன் அறிவும் பலமும் பயன் அற்றுப்போயிற்று அவனையே தகர்த்துக்கொண்டு அவனுள் புரண்ட புரட்சி அவனுக்கே பயங்கரமாக இருந்தது. ஆயினும் அவனால் செய்யக் கூடியதும் ஒன்றுமில்லை. இந்த வெள்ளத்துக்குமப்பால் உள்ளம் புலருவது போல் இன்னொரு உணர்வு.

அவள் கைகளை இறுகப் பற்றித் தன் கழுத்தைச் சுற்றி வைத்துக்கொண்டான். அவள் தன்னை விடுவித்துக் கொள்ளவில்லை. அவள் விழிகள் திடீரென நிறைந்தன. இரு துளிகள் விழியோரம் திரண்டு உருண்டு, கன்னங்களில் வழிந்து, அவன் புறங்கை மேல் விழுந்து, விழுந்த இடத்தைச் சுட்டு எரித்தன.

அவனைப் பிடித்த வெறியும் சட்டென விட்டது. அவளைப் பிடித்த பிடி தளர்ந்தது. கீழே விழுந்த நோட்டுப் புத்தகத்தையும் அத்துடன் நூலோடு கட்டிய பென்சிலையும் குனிந்து எடுக்க முயன்றாள். அவன் எடுத்துக் கொடுத்தான். அவள் எழுதினாள்.

''நான் விதவை.''

அவனைக் கன்னத்தில் அறைந்தாற் போலிருந்தது. வெளித் தாழ்வாரத்தில் ஓர் ஆள் மணியை அடித்துக் கொண்டே கூவிக்கொண்டு போனான்.

''எல்லாரும் வெளியே போகலாம்.''

நம்மை நாம் சும்மா விடுவதேயில்லை. நம்மையே நாம் சுற்றிக் கொண்டேதான் இருப்போம். எத்தனை தடவை அடிப்பட்டுக் கீழே விழுந்து புரண்டாலும், மண்ணைத் தட்டிக்கொண்டு, மறுபடியும் எழுந்து கொண்டுதான் இருப்போம். நம்பிக்கை என்னும் சிறு பொறிக்கு அவ்வளவு வேகம்.

மிருகக்காட்சி சாலையில் மாலையில் இருவரும் ஒரு கல்பெஞ்சில் உட்கார்ந்திருந்தனர். உட்கார்ந்த இடத்துக்கு அருகே, மடக்கி விட்டிருந்த ஜலத்தில், மரப்பாலத்தின் கமானுக்கு அடியில் ஓடங்கள் ஊர்ந்தன. கட்டடங்களின் தடங்கல்கள் இல்லாது வானவிசலாம் அங்கே கவிந்திருந்தது. இடமும் வேளையும் ஓசைகளும் இன்பமாய் இதமாக இழைந்தன

அருகே பாகன் யானையை நடத்திச் சென்றான். அதன் துதிக்கை ஒரு கணமேனும் சும்மா இல்லை. பூமியில்

எதையாவது தேடிக்கொண்டே இருந்தது. ஒன்றுமே அகப்படாவிட்டாலும் ஒரு குத்து மண்ணையேனும் தன் மேல் இறைத்துக் கொண்டு சென்றது.

அவன் மெதுவாக அவளைப் பேரைச் சொல்லி அழைத்தான். அவள் மடிமேல் சேர்ந்திருந்த அவள் கைகளை அவன் கைகள் நாடின.

''நம் வாழ்க்கை நம்மிடந்தான் இருக்கிறது. எனக்கு உற்றார் உறவினர் குற்றம் சொல்வோர் ஒருவரும் இல்லை. உனக்கும் இல்லை. நீ எனக்குத் துணை, நான் உனக்குத் துணை. நமக்கு யாரால் ஆகவேண்டியது என்ன? நம் வாழ்க்கை நம்மிடந்தான், ஏன் சும்மா இருக்கிறாய்? ஏதாவது சொல்லேன்.''

அவள் கைகள் எழுந்து தவித்து செயலற்று மறுபடியும் மடியில் விழுந்தன. முகத்தில் வேதனை ஆடியது. அவன் குரலின் அவசரம் அவளுக்குச் சகிக்க முடியவில்லை.

''சொல்லேன்—''

அவள் ஒன்றுமே சொல்லவில்லை. பெருமூச்சு அவனிடமிருந்து கிளம்பியது, போராட்டத்தின் அசதி தாங்காது. அவள் முகம் அவன் தோள்மேல் சாய்ந்தது. அவன் அவளை அணைத்துக்கொண்டான், அந்தப் பக்கமாகச் சென்ற இருவர் அவர்களைப் பார்த்துவிட்டு, முழங்கையோடு முழங்கை இடித்துக் கொண்டு கிசுகிசு வென்று பேசிக்கொண்டு சென்றனர். பாலத்தின் இறக்கத்திலிருந்து அவர்களின் கேலிச் சிரிப்பு எட்டிற்று. ஆயினும் அவன் சட்டை செய்யவில்லை.

''நம் வாழ்க்கை நம்மிடந்தான் இருக்கிறது.''

இராச் சாப்பாட்டுக்குப் பின் இருவரும் வீட்டுத் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்தனர். இரவின் அமைதியில்

வாடைக் காற்றின் குளுமை கலந்தது. மௌனம் தனி இன்பமாக இருந்தது

அவள், "நேற்று இரவு நடந்ததை நீங்கள் மன்னித்து விடவேண்டும்" என்றாள்.

"இப்போ என்ன அதுபற்றி?"

"உங்களை நான் விரும்பவில்லை என்று நினைக்க வேண்டாம்."

"சே!" அவள் தன் உள்ளுணர்ச்சிகளை அப்படி வெளிப்படுத்துகையில் அவனுக்கு உடல் குறுகுறுத்தது.

"இதுமாதிரி நான் விட்டுப் பேசுவதால், நான் வெட்கம் கெட்டவள் என்று நினைக்கறேளா?"

"நமக்குள் என்ன வெட்கம்?"

பேச்சின் போக்கிலேயே, நாடகத்தில் போல் ஒரு பொய்மை நடுநூல் ஓடுவது தெரிந்தது. அவர்களை அறியாமலே அது புகுந்தது ஆச்சரியமாக இருந்தது.

ஆனால் அவர்களிடையில் ஏதோ ஒரு வெட்கம் இல்லாமல் இல்லை. அதை ஒருவருக்கு ஒருவர் மறுத்துக் கொள்வதிலேயே அது இன்னும் ஊர்ஜிதமாயிற்று, ஆயிரம் கட்டுக் கட்டினாலும் ஒடிந்த உறுப்பிலிருந்து முண்டி நிற்கும் எலும்பு போல்.

"இம்மாதிரி நீங்கள் சொல்வது எனக்கு எவ்வளவு தைரியமாயும் சந்தோஷமாயும் இருக்கிறது தெரியுமா?"

"எனக்கும் அப்படித்தான்—" அடுத்த நிமிஷமே அவனுக்குத் தன் நாக்கைத் துண்டித்துக் கொள்ளலாம் போல் இருந்தது. ஏனோ தெரியவில்லை, சில எண்ணங்கள் மனத்துள் அடங்கியிருக்கும் வரை உருவாயிருக்கின்றன. பேச்சாய் வெளிவந்ததும் கொப்புளம் உடைவதுபோல் உருவெடித்துப் போய் விடுகின்றன.

"க்றீக் க்றீக்" ஒரு பாச்சை சப்தம் கொட்ட ஆரம்பித்துவிட்டது. கரும்பலகையில் ஆணியால் கிழிப்பது போல் வேதனையாக இருந்தது.

'எனக்கு நீ, உனக்கு நான்' என்று வாய் சொல்கிறது. ஆனால் மனம் ஏன் நம்பமாட்டேன் என்கிறது? 'யாருக்கு யார்?' என்று ஏன் மறுப்புக் கேள்வி போடுகிறது? ஒரே இடத்திலிருந்து வரும் இந்த இரட்டைப் பேச்சுத்தான் ஆளைப் பைத்தியமடிக்கிறது.

அப்புறம் பேச்சு ஓடவில்லை. "நேரமாகி விட்டது" என்று சொல்லிக் கொண்டே உடம்பில் இல்லாத சோம்பலை முடித்துக்கொண்டு எழுந்தான். வேஷம் வாழ்க்கையின் இன்றியமையாத அம்சம் போலும்!

இருவரும் மாடியேறுகையில், சாமான்கள் அவைகளின் வழக்கமான அலங்கோலத்தில் இல்லாது ஒழுங்கு பட்டிருப்பது கண்டான்.

"ஓ, மத்தியானமெல்லாம் வேலையாத்தான் இருந் திருக்கிறாய்!"

அவன் முகம் மலர்ந்தது.

ஆம், ஒரு பெண்பிள்ளை வீட்டில் இருந்தால் எவ்வளவு இதவாயிருக்கிறது!

சுத்தத்திற்கே ஓர் அழகு அது அது அதன் அதன் இடத்தில் அதுவே சத்தியத்தின் ஒரு கோட்பாடு. சாமான் களைச் சரியாக வைப்பதில் இவ்வளவு இடம் கூடி வருவதால் இன்னும் நாலைந்து நாற்காலிகள் வாங்கலாம். இப்படித் தாறுமாறாய்க் கிடக்கும் புத்தகங்களை அடுக்க ஒரு 'ஷெல்ப்', இன்னமும் சில புத்தகங்கள்—

"இது என்ன?"

அவள் ஏதோ ஒரு புத்தகத்தைப் புரட்டிக் கொண் டிருந்தாள். அதனுள்ளிருந்து ஒரு படம் நழுவிக் கீழே

விழுந்தது. இருவரும் அதை எடுக்கக் குனிந்து முட்டிக் கொண்டனர். அவன் கையில் தான் அது அகப்பட்டது. அது என்ன என்று அவனுக்கு அப்போதே தெரிந்து விட்டது.

ஒரு புகைப்படம். காயிதப்பூவைத்த ஒரு மேஜை விளிம்பைப் பிடித்து நின்று கொண்டு ஒரு ஸ்திரி புன் முறுவல் பூக்க முயன்று கொண்டிருந்தாள். கண்களில் ஒரு தனி அசதி, உடலிலேயே நீர் வைத்தாற்போல் ஒரு சிறு ஊதல். கர்ப்பிணி.

''யாரது?''

மனமில்லாத பதில் அவனிடமிருந்து பிடுங்கப்பட்டது.

''என் மனைவி.''

''ஓ!''

அவர்களிடையில் தேங்கிய மௌனத்தில் ஸ்புடமானாற் போல அந்தப் படம், அவனுக்குக் கையில் ஏந்திய தணல் போலாகிவிட்டது அதை வைக்க இடம் கிடைக்காது தவித்தான். கடைசியில், அங்கு மாட்டியிருந்த கோட்டுப் பையுள் திணித்தான். அவன் உள்ளங்கையில் வேர்வை பிசுபிசுத்தது. அந்தச் சமயம் அவன் முதல் மனைவியை எவ்வளவு பயங்கரமாக வெறுத்தான்!

அவள் புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்தாள். ஆயினும் அவளுடைய வெறிச்சிட்ட நோக்கிலேயே தெரிந்தது. அவளுக்கு ஒரு எழுத்தில் கூடக் கவனம் அழுந்த வில்லை. ஆயினும் மனத்தின் அவஸ்தையை மறைக்க செயல் அவசியமாயிருக்கிறதே! அவன் போய் ஜன்னலண்டை நின்றான்.

''என்ன ஒரு மாதிரியாயிருக்கிறாய்?''

''யார்? நானா?''

அவனுக்கு மூச்சு சற்றுத் திணறிற்று.

"அவள், என் சென்றுபோன வாழ்க்கையின் அம்சம். நாங்கள் கல்யாணமாகி ஒரு வருஷங் கூடச் சரியாகச் சேர்ந்து வாழவில்லை. இருந்த வரையில் சதா ஏதாவது நோய், பாதி நாள் அது உடம்பு இது உடம்பு என்று பிறந்த வீட்டுக்குப் போய் விடுவாள். கடைசியில் பிரசவக் கோளாறில் இறந்து போனாள். அந்தக் குழந்தையும் தங்கவில்லை. அவள் நினைவே, எனக்கு இரவு கண்டு, காலையில் சொல்ல மறந்து போகும் கனவு போல் இருக்கிறது. அதனால்தான் நான் இதுவரை உன்னிடம் கூடச் சொல்லவில்லை."

அவள் ஒன்றும் பதில் பேசவில்லை. அவசரமாகச் சொல்லிக் கொண்டே போனான்.

"நான் அவளைப் பற்றிச் சொல்லத்தான் என்ன இருக்கிறது? அவளைப் பற்றித்தான் நாம் பேசுவானேன்? அவள் இறந்த காலம் நமக்கு இப்பொழுது நிகழும் நிமிஷம் இருக்கிறது; நம்முடைய எதிர்காலம், நம்முடைய ராஜ்யம். அவளைப் பற்றி நமக்கென்ன?"

மறுபடி மௌனம் இருவரிடையிலும் திரையிறங்கிற்று.

"எனக்குத் தூக்கம் வருகிறது" என்று சொல்லிக் கொண்டே அவள் நழுவினாள்.

"இதுதானா உன் பதில்?"

"நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? முதல் தாரம் இறந்து மறுதாரம் கொள்வது புதிதா? முதல் தாரம் இருக்கையிலேயே இளையாள் பண்ணிக் கொள்வது உண்டே!"

அவள் பதில் அவனுக்கு நிம்மதியை அளிக்கவில்லை. அவள் போன பிறகு வெகுநேரம் அங்கேயே உலாவினான். மனம் தவித்தது.

திடீரென ஒரு பெரும் சீற்றம் அவனைப் பிடித்துக் கொண்டது. கோட்டுப் பையிலிருந்து போட்டோவை எடுத்துச் சுக்கல் சுக்கலாகக் கிழித்து எறிந்தான்.

தெருச்சத்தம் ஓய்ந்து விட்டது. விளக்குக் கம்பங்கள், மௌன சாட்சிகள் போல் வரிசையாக நின்றன. எதற்கு?

திடீரென்று மிகவும் புழுக்கமாக இருந்தது. அடேயப்பா! இப்படி வெந்தால், இது மழைக்குத்தான் அறிகுறி.

இப்போது தூங்கியிருப்பாளா? தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு எப்படிப் படுத்துக் கொண்டிருப்பாள்? தன்னந்தனியாக, அநாதை மாதிரி; இருளில் தட்டித் தடவிக் கொண்டு படுக்கையறையுள் சென்றான்.

மெதுவாகப் பெயரைக் கூப்பிட்டு அவளைத் தொட்டான். ''ஓ, நீங்களா?'' அவள் குரலில் துளிக் கூடத் தூக்கமில்லை. அவள் கைகள் அவன் கழுத்தைக் கட்டியணைத்தன. துக்கம் தொண்டையை அடைத்தது. ஏன் இப்படி நம்மை நாமே வருத்திக் கொள்கிறோம்? அன்பு இருக்கிறது. ஒருவரை ஒருவர் நம்பியிருக்கிறோம். ஆனால் ஒருவரை ஒருவர் இம்சிக்காமல் இருக்க முடியவில்லை. இப்படி உடலோடு உடல் குழைந்தும் உள்ளத்துக்கு உள்ளம் ஏன் தொடக் கூட முடியாது தவிக்கிறோம்?

திடீரெனப் புழுதிக் காற்று கிளம்பி இன்னல் கதவுகள் படபடவென அடித்துக் கொண்டன; காற்றில் மண் வாசனை, கூடத்திலிருந்து குப்பை பறந்து வந்து முகத்தில் மோதியது ஜன்னலுக்கு வெளியே மின்னல் படபடத்தது, எங்கேயோ மழை பெய்கிறது. எங்கிருந்து வந்து கொண்டிருக்கிறது?

அவள் முகத்தைப் பார்க்க வேண்டும்; அடக்க முடியாத அவா அவனைத் தூண்டிற்று. மேஜையண்டை போய்,

நெருப்புக் குச்சியைக் கிளித்து விளக்கை ஏற்றினான். அவள் படுக்கையில் சாய்ந்தபடி சிரித்துக் கொண்டிருந்தாள். வெகு அழகாக இருந்தாள். அவளண்டை சென்றான். அவன் மார்பில் ஒட்டிக் கொண்டிருந்த ஒரு கடிதாசுத் துண்டை எடுத்தாள். காற்றில் அலைந்து வந்த குப்பை. அதை உற்று நோக்கியதும், அச்சத்தில் அவள் புருவங்கள் நெரிந்தன.

அவளிடமிருந்து வாங்கினான். ஒரு கண், ஒரே கண். அசதியுடன் சிரிக்க முயன்று கொண்டிருக்கும் ஒரு கண் அவனை நோக்கியது. அவன் மனைவியின் புகைப் படத்தைக் கிழித்த சுக்கல்களில் ஒன்று. விடாத சாபம் போல் ஏன் இப்படி ஒட்டிக் கொண்டிருக்கிறாள்?

இவள் படத்தைக் கிழித்தெறிந்ததால் இவளை அழித்தேனோ? ஏன் இவள் கண் இப்படி எங்களைக் காவல் காக்கிறது? இவளுக்கே என்ன, செத்தபின் தான் உயிரா?

இன்று எல்லாமே ஏன் சதி செய்கிறது? தப்பைத் தவிர வேறு எதுவுமே நம்மால் செய்வதற்கு இல்லையா?

காலை வருகிறது. தூக்கத்தினின்று விழிக்கவில்லை. படுக்கையினின்று எழுகிறேன். ஒரே கூட்டில் அடைத்த விலங்குகள்போல் ஒருவரை ஒருவர் சுற்றி வருகிறோம். அவரவர் சிந்தனையில் அவரவர் மூழ்கியபடி, பண்ணினதையே பண்ணிக்கொண்டு, எண்ணினதையே எண்ணிக்கொண்டு, நினைத்துக் கொள்கிறோம், என்னவோ ஒவ்வொரு தடவையும் புதியதாய் உண்டாக்கு வதாய். ஆனால் எதிருக்கெதிர் இரு நிலைக்கண்ணாடி களை வைத்துவிட்டு அவற்றில் உள்ளுக்குள் உள்ளாய்த் தெரியும் எண்ணற்ற பிம்பங்கள் போல்தான், நம்முடைய எல்லையற்ற புதுமைகளும்!

இதோ வேலைக்குப் போகும் வேளை வந்துவிட்டது. போகிறேன். வயிற்றுப் பிழைப்பில் மனம் முனைவதில் வீட்டுக் கவலையை மறக்க மாட்டேனோ?

வீட்டில் இப்போது அவள் என்ன செய்து கொண்டிருப்பாள்? என்னத்தை நினைத்துக் கொண்டிருக்கிறாள்? என்னைப்பற்றியா, என் மனைவியைப் பற்றியா? அல்லது...

இப்பொழுது என் புது வாழ்வில், இறந்து போனவள் ஏன் புகுகிறாள்? நான் இருப்பவளை விட்டு இறந்து போனவளை ஏன் நினைக்கிறேன்? அவள் எந்த விஷயத்தில் இவளைவிட உயர்ந்தவள்? மெய்ம்மறக்கும் நிலையில் வைக்கும் விஷயங்களைப்பற்றி அவளோடு பேசினால், ஏதாவது சம்பந்தமில்லாமல் குழாயில் தண்ணீர் வரவில்லை என்று முணுமுணுப்பாளே! இறந்துபோன பின்னர் அவளுக்கு என் மனத்தில் ஆடிக் கொண்டிருக்கும்படி என்னிடம் என்ன அவ்வளவு அக்கறை? ஒரு வேளை அவள் இறந்தபோது அவளை நான் அறியாமல்; இப்பொதுதான் எனக்குப் புரிந்து கொண்டிருக்கிறாளா?

இதோ மாலை வருகிறது. நான் வீடுபோய்ச் சேர வேண்டும். இவள் முகத்தில் விழித்தாகவேண்டும். இவள் முகம் திருப்தியாக இல்லை. இன்றைய பொழுதை இவளும் என்போல் குருட்டுச் சிந்தனையில்தான் போக்கியிருக்கிறாள். நான் என் மனைவியைப் பற்றி நினைப்பது போல் இவளும் தன் கணவனைப் பற்றிய நினைவுகளைப் பட்டுக் கொண்டிருந்திருப்பாள்.

ஆயினும், எப்படி, எதைக் கேட்க முடிகிறது? ஓயாமல் ஒருத்தருக்கொருத்தர் மௌனமாய்ப் போராடிக் கொண்டே இருக்க வேண்டியதுதான், ஒருவரை ஒருவர் விட்டுத் தனியாகவும் இருக்க முடியவில்லை. கிட்டவும் இருக்க முடியவில்லை.

**தட்டாமாலை தாமரைப்பூ**
**கிட்டவந்தால் குட்டுவேன்**
**எட்டிப்போனால் துப்புவேன்**

சொட்டுச் சொட்டென வண்டல், மனத்தில் சொட்டிக் கொண்டேயிருக்கிறது.

ஒரு நாள் சட்டென அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. ஆபிசிலிருந்து சீக்கிரமே திரும்பி வந்து விட்டான். அவள் ஜன்னலண்டை முகத்திற்குக் கையை முட்டுக்கொடுத்து உட்காந்திருந்தாள். அவள் முகம் சோபையிழந்திருந்தது. அவன் கோட்டைக் கழற்றிக் கொண்டே, ''சட் சட், கப்பல் கவிழ்ந்தாலும் கன்னத்தில் கை வைக்காதே'' என்றான்.

''என்ன, சீக்கிரம் திரும்பிவிட்டீர்கள்? உடம்பு சுகந்தானே?''

வந்து கிட்ட உட்காந்தான்.

''பத்து நாள் லீவு போட்டுவிட்டேன். நாம் எங்கேயாவது வெளியூர் போய், குஷியாக இருந்து விட்டு வருவோம். வண்டி காடி சத்தமும் இந்தப் புழுதியும் புழுக்கமும் இல்லாமல் எங்கேயாவது கிராமாந்தரம் போவோம், மாற்று உடைக்கு ஒரு பெட்டி தவிர வேறே மூட்டை முடிச்சு வேண்டாம். நிம்மதியாக, இடமாற்ற மாக இருப்போம். என்ன?''

அவள் புன்னகை புரிந்தாள்.

அவர்கள் தீர்மானித்த இடம் போய்ச் சேருகையிலேயே அந்தி மந்தாரை பூத்துவிட்டது. இரவு வரப்போகும் மழைக்காக வானத்தில் மப்பு. வயற் பரப்புகளைத் தாண்டிக் கொண்டிருக்கையிலேயே கிராமத்தைச் சுற்றிய வாய்க்காலின் நெளிவு அழகாகத் தெரிந்தது.

ஓர் 'அம்மையார்ப் பாட்டி' வீட்டைத் தேடிக் கண்டு பிடித்து அதில் தங்க ஏற்பாடாயிற்று. அதைக் குடிசை

என்பதா வீடு என்பதா? ஒரு கூடம். ஓர் அறை. அவ்வளவு தான். கதவைத் திறந்துகொண்டு அறையுள் நுழைகையி லேயே உப்பு மண் தலைமேல் உதிர்ந்தது. சுவர்களில் மழை ஜலம் வருஷக்கணக்கில் வழிந்து, விசித்திரமான கறைகளை எழுதியிருந்தது. சுவரில் விட்டிருக்கும் ஓட்டை யொன்றை பாட்டி ஜன்னல் என்று காண்பித்து, காற்று பிய்த்துக்கொள்ளும் என்று சிபாரிசு செய்தாள். அதன்வழி நோக்குகையில் மாடுகள் மந்தையிலிருந்து கழுத்து மணிகள் கிண்கிணிக்க வந்து கொண்டிருந்தன.

தினப்படிக்குக் கையாளும் சாமான்களை அவன் பெட்டியிலிருந்து எடுத்து வைக்கயில் அதனுள் துணிகளுக்கு அடியில் கைக்கு ஏதோ கெட்டியாகத் தட்டுப்படுவதை உணர்ந்தான். எடுத்துப் பார்க்கையில் அவனுக்குப் பரிசாக வந்த இருமூக்குக் கிண்ணி என்ன ஆச்சரியம்! இது இங்கு பிரத்தியட்சமாவானேன்? ஆ. இப்போ ஞாபகம் வந்தது. எங்கேயாவது பத்திரப்படுத்துவதற்காகப் பயணப் பெட்டியில் வைத்துவிட்டு பயணம் நேரவே, பெட்டியுடன் அதுவும் வந்துவிட்டது. இதுவும் ஒரு சகுனந்தான். அதை எடுத்துத் துடைத்துப் பெட்டிமேல் வைத்தான்.

பாட்டி சாப்பிடுவதற்கு இட்ட தாமரை இலைக்கு முதற்கொண்டு, 'பில்' பண்ணினாள். ஆனால் அன்றிரவு குத்துவிளக்கு வெளிச்சத்தில் சாப்பிட்ட வற்றல் குழம்பும் கீரை மசியலும் தேவாம்ருதமாகத்தான் இருந்தன.

கிராமத்தில் ஊரோசை எவ்வளவு சுருக்க அடங்கிவிடு கிறது! சுவரில் விட்டிருக்கும் ஓட்டைவழி தெருவில் ராந்தல் கம்பத்தில் எரியும் முறைவிளக்கு 'மினுக் மினுக்'கென்றது.

பாட்டி எப்பவோ சாமானையெல்லாம் ஒழித்துப் போட்டுவிட்டுக் கட்டையைக் கூடத்தில் நீட்டிவிட்டாள். வெகு சீக்கிரத்தில் ஒரு சிறு குறட்டை அவள் மூலையினின்று கிளம்பியது.

அவர்களுக்கு அவள் ஒரு சிறு அகல் விளக்கு கொடுத்திருந்தாள். ஆடும் சுடரில், அறையில் சுவரின் மேல் ஒரு மூலை ஒரு சமயம் இருண்டது. மறு சமயம், இருண்ட இடம் சற்று வெளிச்சமாயிற்று. பரணியில் எலிகள் பிராண்டி கீச்சிட்டன.

ஒரு மூலையில் நெற்குதிர்.

வெளியே, மேலே இடி குமுறியது.

சப்தமே சப்திக்கச் சோம்பிற்று.

பட்டணத்துக்கும் இவ்விடத்துக்கும் எவ்வளவு வித்தியாசம்! இந்த வேளையின் லாகிரியில், இப்படியே, மெழுகிய மண் தரையில் நாள் கணக்கில் எழுந்திராது படுத்திருக்கலாம் போலிருக்கிறது.

கூரைமேல் படபடவென்று மழை இறங்கிவிட்டது. கண்ணில் உறுத்தும் துரும்பை எண்ணெய் ஒதுக்குவது போல், அவனுள் அந்த மழை புகுந்து ஏதோ செய்தது. உள்ளம் நெகிழ்ந்தது.

இந்தச் சூழ்நிலை அவளையும் ஏதோ அவஸ்தைப் படுத்துவது அவள் முகத்தைப் பார்க்கையிலேயே தெரிந்தது. அவள் கண்களில் ஜலம் துளித்திருந்தது. உதடுகள் நடுங்கின. மனங்கள் ஒன்றை ஒன்று துணை நாடும் வேளை காணும் வேதனை இன்பத்தின் வேதனையா? வேதனையின் இன்பமா?

அவள் பெயர் அவன் வாயில் அசைந்ததுமே, அவளுக்குப் பஞ்சில் பொறி வைத்த மாதிரி ஆகிவிட்டது. ஒரு தாவு தாவி அவன் மார்மேல் விழுந்து கதறினாள். ஏன்? புரியவில்லை. ஆயினும் அவள் கண்ணீரில் அவன் மார்பு நனைகையில், எலும்பு உருகிற்று. அவளை இறுக அணைத்துகொண்டான்.

திடீரென்று அவள் கண்கள் பயங்கரத்தில் வெறித்துச் சுழன்றன. 'வீல்' என அலறி, அவனிடமிருந்து உதறிக் கொண்ட வேகத்தில் பின்னுக்கு வீழ்ந்தாள். பயத்தில்

அவள் முகத்தில் குழுமிய அவலக்ஷணம், அருவருப்பை விளைவித்தது. அவள் பார்வை சென்ற வழி அவன் நோக்கும் சென்று சுவரிலிருந்து எட்டிப் பார்க்கும் ஒரு முகத்தில் நிலைத்தது.

முகமென்றால் முகமில்லை. முகத்தின் பிண்டம். எண்ணற்ற தடவைகள், பல மழைகளின் ஜலம் வழிந்து, நாளடைவில் உருவான கறை, ஆயினும் அகலின் சுடர் குதிக்கையில் அது அமானுஷ்யமான ஜீவனுடன் அவர்களை யும் அவர்களுடைய காரியங்களையும் கவனித்துக் கொண் டிருந்தது. கண்கள் ஒருமுறை சிமிட்டின.

சீ, பிரமை! தூரத்தில் ரயிலின் ஊதல் காற்றில் மிதந்து வந்தது. அதைக் கேட்டதும் 'க்றீச்' என்று மறுபடியும் அவள் கத்தினாள். நல்ல வேளையாகத் தெருவில் அடிக்கும் மழைக்காற்று அந்தக் கத்தலை அடித்துக் கொண்டு போயிற்று. கூடத்தில் பாட்டி முணகிப் புரண்டாள். மேலும் மேலும் பீறிட்டு வரும் பேய்க் கூச்சலை அடக்க, வாயில் முன்றானையைத் திணித்துக் கொண்டாள். பொறியில் மாட்டிக் கொண்ட எலிபோல், அவள் உடல் வெடவென உதறிற்று.

''என்ன இது?''

''இல்லை, என்னைத் தொடாதேயுங்கள்! என்னிடம் வராதேயுங்கள்—'' அவள் குரலின் தீர்மானமும் கட்டளை யும் கேட்டதும் அவனுக்கு ஆச்சரியமும் கோபமும் உண்டாயின. அச்சங்கூடக் கண்டது. என்ன புத்திக் கோளாறா? திடீர் திடீரென்று.

''சரி, உன்னைத் தொடவில்லை. படுத்துக்கொள்—''

''இல்லை, உங்களிடம் ஒன்று சொல்ல வேண்டும்.''

''நாளைக்குப் பேசிக் கொள்ளலாம்.''

''இல்லை, நாளைக்கு வேளை கிடையாது. நாம் இங்கு விட்டுப் போய் விடவேண்டும். எப்படியும் நான் போய் விடுவேன். நாம் பிரிந்து விடவேண்டும்.''

''என்ன உளறுகிறாய்! ஒரு புருஷன் பொறுமைக்கும் எல்லை இல்லையா?'' அவன் பேச்சு அவள் காதில் ஏறவில்லை.

''இல்லை என் புருஷனைப் பற்றி உங்களிடம் சொல்லியாக வேண்டும்—''

அவன் புகைச்சிரிப்பு சிரித்தான். ''நீ உன் புருஷனைப் பற்றியும், நான் என் மனைவியைப் பற்றியும் பேசிக் கொண்டிருப்பதற்கும், பேசாத வேளைக்கு யோசனை பண்ணிக் கொண்டிருப்பதற்குந்தான் கல்யாணம் செய்து கொண்டோமா?''

''இல்லை. நீங்கள் என் கணவரைப்பற்றி அவசியம் தெரிந்து கொள்ளவேண்டும். அதுவும் இப்போதே. ரொம்பவும் சுறுசுறுப்பான மனிதர். நின்ற இடத்தில் நிமிஷம் நிற்கமாட்டார். உடலில் எப்போதுமே துடி துடிப்பு. எல்லாமே அவருக்கு அவசரம். சாவதானத்தைச் சற்றுக் கூடப் பொறுக்க மாட்டார். நானோ சுபாவத்திலேயே மெது. எப்படித்தான் இப்படி ஒருவருக்கு ஒருவர் வாய்த்தோமோ! தெருவில் நாங்கள் இருவரும் சேர்ந்து போனால், என்னால் சேர்ந்தே போக முடியாது. பின்னால் தங்கிவிடாமல் இருப்பதற்காக அவர் பக்கத்தில் ஓடிக் கொண்டேயிருப்பேன். அவர் நடையின் வீச்சும் வேகமும் அப்படி. எல்லாவற்றிலுமே அப்படித்தான். வாழ்க்கையில் அவர் நீந்திய வேகத்திற்கு என்னால் ஈடு கொடுக்க முடியவில்லை. சதா திணறிக் கொண்டிருந்தேன்.

''எங்களிருவருக்கும் இவ்வளவு குணபேதங்கள் இருந்தும் என்னிடம் அவருக்கு வாஞ்சை அதிகம்.

''ஒரு நாள் மாலை அவர் ஆபீஸிலிருந்து திரும்பி வரவில்லை. எனக்கு அன்றைக்கு மறக்கவே முடியாது. அன்றைக்கு இரண்டு பேரும் சினிமா போவதாகப் பேச்சு. வேளையோடு சமைத்து வைத்து விட்டு, நான் வாரிப் பின்னி, உடுத்து, கண்ணுக்கு மையிட்டு, வெற்றிலையை

வாயில் குதப்பிண்டு, அவர் வருகிற வரை பொழுது போக்குக்கு, பக்கத்து வீட்டுக் குழந்தையை வைத்துக் கொஞ்சிண்டிருந்தேன். அப்போ அவசர அவசரமாக ஆபீஸ் பியூன் சைக்கிளில் வந்து இறங்கினான். அவன் முகம் பார்க்கச் சகிக்கவில்லை.

''என்னடா?''

''அம்மா, ஐயர் வீடு திரும்ப எலெக்ட்ரிக் வண்டி பாஸானப்புறம் ஓடிப் பிடிச்சு கால் வழுக்கி, வண்டிக் கடியிலே பூட்டாரம்மா''

அவனுக்குப் பிடரி குறுகுறுத்தது. இறந்து போனவனின் ஆவியே, இப்போது அந்த அறைக்குள் வந்து அவனைத் தொட்டமாதிரி இருந்தது. சாரல் அறைக்குள் கூட அடிக்க ஆரம்பித்து விட்டது. மண் தரையில் அங்கங்கு ஜலம் கசிந்தும் குழிகளில் தேங்கவும் தலைப்பட்டது.

''வீட்டுக்குக் கொண்டு வந்தது அவர் உடம்பில்லை. மாமிசப் பிண்டந்தான்.''

சுவரில் முகம் சிரித்தது.

அவன் அவளைப் பார்க்கக்கூட இல்லை. அவன் தலை கொஞ்சம் கொஞ்சமாகத் தோள்களுக்கு இடையில் குனிந்து கவிழ்ந்தது. தோள்கள் குலுங்கின. அவள் அவனிடம் நகர்ந்து பரிவுடன் தலையைத் தன் தோள் மேல் சாத்திக்கொண்டாள்.

''என் அன்பே—'' என்றாள்.

ஆனால் அவள் செய்கையிலும் வார்த்தையிலும் அவன் விரும்பிய அர்த்தம் காணவில்லை. அவள் தன் எல்லைகளை உணர்ந்து கொண்டபின், அந்த எல்லைகளுக்குள் அவன் மனக்கனம் குறைவதற்காகச் செய்யும் வெறும் உபசரிப்பு.

வெளியில் மழை நின்று விட்டது. தெருவில் சிறுசிறு அருவிகள் தெளிவாக தெருவிளக்கில் பளபளத்து ஓடிக் கொண்டிருந்தன.

# 11. சாவித்ரி

மணையில் சேர்ந்தாற்போல் பத்து நிமிஷம் சாவித்ரிக்கு இருப்புக் கொள்ளவில்லை. நேரத்திற்கு ஒரு முறை மாடிக்கும் கீழுக்குமாய் நடமாடிக்கொண்டிருந்தாள். கல்யாணத்தில் ஆயிரம் ஜோலி இருக்கையில், இந்தச் சாஸ்திரிகளுக்கு என்ன வேலை? சமையல்காரன் சாம்பாரை என்ன பண்ணிண்டிருக்கானோ தெரியவில்லை. (அண்டா ஈயம் போதாதென்று அவளுக்கு நினைப்பு) அப்புறம் அப்பளாத்தை இட்டு வைத்தால் ஆச்சா? பொரித்துப் போடவேண்டாமா? பந்தியில் எல்லாவற்றையும் பரிமாறி விட்டு, அப்பளாத்தை எடு என்கிற வேளைக்கு அப்பளாத்தைத் தேடினால் என்ன பண்ணுகிறது? எல்லாவற்றையும் பண்ணிவிட்டுக் கடைசியில் மூக்கை அறுக்கிறாப்போல் ஏதாவது நடந்துவிட்டால் என்ன பண்ணுகிறது? பிள்ளையாரே, கடைசி வரைக்கும் விக்கினம் வராமல் நீதான் காப்பாத்தவேணும். உனக்கு ஏழு சூறைத் தேங்காய் உடைக்கிறேன்

மாட்டுப்பெண்கள் எல்லாம் இருக்கிறார்கள். எல்லாம் ஆசையாத்தான் செய்கிறார்கள். ஆனால் எதுக்குப் பிரயோசனம்? கொசுவம் வைத்து இன்னும் ஒரு வேளை சமயமானால் சரியாகக் கட்டிக்கொள்ளத் தெரியவில்லை. புஸ¬புஸ¬வென்று ஏதோ கனகாரியமாக இருக்கிறது போல வளைய வருகிறார்களே தவிர, கைக்காரியத்தை மறந்துவிட்டு வந்தவர்களோடே பேசிச் சிரித்துக் கொண்டிருக்கத்தான் லாயக்கு.

இதோ கூடத்தில் பேராண்டி தொண்டையைக் கிழிச்சுண்டு கத்தறது காதைப் பொளிகிறது. அவனுக்குப் பசிவேளை வந்துவிட்டது. ஆனால் சிவகாமுவுக்கு மாத்திரம் ஏன் தெரியமாட்டேன் என்கிறது? ரெண்டு கண்ணுக்கு நாலு கண்ணாகக் கண்ணாடி வேறே போட்டுண்டிருக்கிறாளே!

''சிவகாமூ! ஏ சிவகாமூ— ஊ...!''

''இதோ பாருங்கோ, முகூர்த்த வேளை நெருங்கி விட்டது. நீங்கள் இது மாதிரியெல்லாம் எழுந்திருந்து எழுந்திருந்து நடுவில் போய்க்கொண்டிருக்கக்கூடாது'' என்றார் சாஸ்திரிகள்.

''சரிதாங்காணும். நீங்கள் இட்டிலி காபி சாப்பிட்டேளா?''

''பார் சாவித்திரி மாமிக்கு உடம்பு படகுபோல் இருந்தாலும் பந்துபோலத்தான் ஓடி விளையாடுகிறாள்!''

''என்ன இருந்தாலும் கல்யாணப் பெண் இல்லையா?''

''சிவகாமூ! ஏ சிவகாமூ— ஊ— ஊ!''

''பார்த்தீர்களா? பார்க்காவிட்டால் எல்லாரும் பார்த்துக்கொள்ளுங்கள். காது வரைக்கும் வாய் கிழியற கல்யாணப் பெண்ணை இந்தக் கல்யாணத்தில்தான் நீங்கள் எல்லாரும் பார்க்கலாம்.''

கொல்லென்று சுற்றும் ஒரு சிரிப்பு விஷ்ணுசக்கரம் போல் சுழன்று எழுந்தது.

''சுந்தாதானே இப்போ பேசினது?''

''இதோ இருக்கிறேன், மாமி.''

''சுந்தாதான் இப்படிப் பேசுவாளென்று எனக்குத் தெரியுமே. என்னடி சௌக்கியமா? பழைய குறும்பெல்லாம் இன்னும் போகவில்லையா?''

''தேகத்தோடே பிறந்தது எங்கே மாமி போகும்? எங்கே ஓடறேள், அவசரமா? நில்லுங்கள், நமஸ்காரம் பண்ணுகிறேன்.''

''கிழக்கைப் பார்த்துப் பண்ணு. மகாராஜியாக இரு. தோளோடு தாலி தொங்கத் தொங்கக் கட்டிண்டு, பதினாறும் பெற்று—''

''பெற்றால் ஆச்சா மாமி!'' சுந்தா பெருமூச்செறிந்தாள்; ''தக்க வேண்டாமா?'' அவளுக்கு அடுத்தடுத்துக் குறைப் பிரசவத்திலேயே நான்கு தவறிவிட்டன.

''என்னடீ!'' சாவித்ரி கர்ஜித்தாள்; ''எல்லாம் தக்கும், தக்கும். முளைத்து இன்னும் மூணு இலை விடவில்லை. அதுக்குள்ளே இவ்வளவு அலுப்பா?''

அதற்குள் யாரோ அவசரமாய்த் தோளைச் சுரண்டினாள். ''மாமி மாமி, மாமா உங்களையே பார்க்கிறார்.''

மறுபடியும் ஒரே சிரிப்பு. சாவித்ரி திரும்பிப் பார்த்தாள். அவள் கணவர் அவளைப் பார்க்கவில்லை. சங்கீத வித்வான் கச்சேரியில் ஸ்ருதியைக் கணிப்பதுபோல் கழுத்தைத் திருப்பிக் கொண்டு யாருடனோ பேசிக்கொண்டிருந்தார். சாவித்ரி ப்ரமித்து நின்றாள்.

அந்த வேளைக்கென்றே யாருக்குமே தேஜஸ் வந்துவிடுமோ? அவர் அப்படி ஜ்வலித்தார். பரந்த நெற்றியில் சந்தனத்தைக் கீறலாய்த் தரித்து, வெண்பட்டு அங்கவஸ்திரத்தை யோக வேஷ்டியாகப் போட்டுக் கொண்டு தொடைமேல் மிடுக்காய் வைத்த வலக் கையில் கங்கணமும் இரண்டாவது விரலில் பவித்ரத்தடியில் மோதிரத்தில் பதித்த பச்சைக்கல் பளிச்...பளிச்.

''மாமி எங்களையும் கொஞ்சம் பார்க்கலாம். மாமா பழைய மாமாதான்!'' சாவித்திரியின் விழியோரங்களில் குளுமை பெருக்கெடுத்தது. பழைய மாமாதான். ஆனால்

பழைய மாமாவும் இல்லை. அதுவும், கடந்த நாலைந்து வருடங்களாய் அவரை அவள் அநேகமாய்க் கட்டிலிலோ நாற்காலியில் சாய்ந்தபடிதான் கண்டிருக்கிறாள். சுக்கங் காயாய் வற்றிப்போன அந்தத் தேகத்தில் இதோ இப்பொழுது இந்தச் சமயத்திற்கென்று ஒரு புதுச் சக்தியை ஆவாகனம் பண்ணிக்கொண்டு முறுக்கேறிய சாட்டை போல் அவர் மணையில் அளித்த காட்சி, சாவித்ரிக்குக் கண்கொள்ளவில்லை.

மூன்று வருடங்களுக்கு முன்னால் பெரிய டாக்டர் சொன்னது இப்போத்தான் சொன்னமாதிரி இத்தனை சந்தடியிலும் நினைவில் ஒலிக்கிறது.

''பாட்டி. உங்கள் பிள்ளைகள் இங்கிருந்தால் உங்கள் கிட்டே சொல்லமாட்டேன். அவர்கள் கிட்டே சொல்லுவேன். அவர்கள் இங்கில்லை. அதனாலே உங்கள்கிட்டே சொல்லவேணும்.''

ஒரு கை அவளையும் அறியாமல் அடிவயிற்றை அமுக்கிக் கொண்டது.

என்னடாப்பா பயமுறுத்தறே?''

''நீங்கள் அவரை நம்பாதேயுங்கள். எப்போது என்ன ஏதென்று சொல்ல முடியாது. அவர் உடம்புக்கு வந்திருக் கிறது அப்படி. நீங்கள் அவரை நம்பாதீர்கள். உங்கள் தாலியை இரும்பாலே அடித்துப் போட்டிருக்கிறது. அதனாலேதான் இதுவரைக்குமாவது தள்ளிக்கொண்டு வருகிறது. அதனாலே அதை நீங்கள் நம்புங்கள்.'' அப்படி அவன் சொல்லி மூன்று வருஷங்களாச்சு. இதோ இன்று இன்னொரு தாலி கட்டிக்கொள்ளப் போகிறாள்.

அதைப்பற்றிப் பெருமிதமா? இல்லை. எதையோ சாதித்துவிட்டோமென்று மேட்டிமையா? இல்லை, இல்லை. ஒரு பரவசந்தான் புரிகிறது, நீண்ட நடை வழியிலே சுமைதாங்கியைக் கண்டாற்போல்.

"கண்டேளோடி இந்த அதிசயத்தை? மாமி மாமாவைப் பார்க்கிற பார்வையிலே பால் ஏடு மாதிரி அல்லவா தோய்ந்து விட்டாள்!"

"சரிதான் போங்கோடீ!" சாவித்ரி சீறி விழுந்தாள்.

"வந்துவிட்டதடீ மாமிக்குக் கோவம்! வராது வராது என்றீர்களே!" கை கொட்டல். "கெக்கே!" கொக்கரிப்பு. கேளிக்கை வாய்க்கு வாய் குறும்புப் பேச்சும், குதூகலச் சிரிப்பும் பந்தாடிக்கொண்டே கல்யாணக் கும்பலில் பரவின.

சாவித்ரியின் முகத்தில் கண்ணோரத்துச் சுருக்கங்களிலும் நெற்றிக் கோடுகளிலும் கன்னச் சதைக் கதுப்புகளிலும் சப்தமற்ற சிரிப்பு வந்தது.

சிறிசுகள் இப்படித்தான் இருக்கும். இதுகளுக்குச் சமயம், போது, சின்னவர் பெரியவர் வித்தியாசம் கிடையாது. அருமை பெருமை இல்லை. இவர்களுக்குச் சிரிச்சுண்டே இருக்கணும். சிரிக்க எது அகப்பட்டாலும் போதும். இன்னும் பத்து வருஷங்களாகட்டும். அப்போதும் இவர்கள் இப்படியேதான் இருப்பார்கள். இந்தக் காலத்துச் சிறிசுகள் அல்லவா? இவர்களோடே நம்மால் போட்டி போட முடியுமா?

"அம்மா!" என்றான் பஞ்சாமி; "சாஸ்திரிகள் கூப்பிடுகிறார்."

"இதோ போறேன்."

"அம்மா, உன்னோடு ஒன்று சொல்ல வேணும். ஆனால் சொல்லாமலும் இருக்க முடியுமென்று முடியவில்லை."

"அம்மா!" பஞ்சாமிக்கு முகம் தக்காளியாய்த் தவித்தது.

"அம்மா, என்ன சொல்ல வந்தேனென்றால் எங்கள் அப்பா அம்மா கல்யாணத்தை நாங்கள் பார்க்கும்படியாக

நேரும் இந்தப் பாக்கியத்தை எப்படி உன்னிடம் தெரிவித்துக் கொள்வது?''

பஞ்சாமி வார்த்தைகளுக்குப் படும் அவஸ்தையைப் பார்க்கச் சாவித்ரிக்குச் சிரிப்பு வந்துவிட்டது. பஞ்சாமியின் சுபாவமும் அப்படித்தான். அவனுக்குத் தலையைச் சுற்றித் தான் மூக்கைத் தொட வரும். குழந்தைகள் எல்லாம் என்னவோ ஆசையாகத்தான் இந்த ஸஷ்டியப்த பூர்த்தியைக் கொண்டாடுகிறார்கள். அவர்களுக்கும் இது ஒரு பெருமைதானே! வயிற்றுப் பிழைப்புக் காரணமாய் எங்கெங்கோ சிதறிவிடுகிறார்கள். அவரவர்களுக்குத் தம் தம் குடும்பம், குழந்தை குட்டி, கவலைகள். அதில் ஊரில் ஒதுங்கியிருக்கும் இந்தக் கிழங்களைப் பற்றியே எப்போதும் நினைப்பு இருக்குமா? அவர்களை நாமும் ரொம்ப கசக்கவும் வழியில்லை. ஏதோ இந்த சமயமாவது—

அவர் என்னவோ, இதைப் பெரிதாய்க் கொண்டாட வேண்டாமென்றுதான் சொல்லிவிட்டார். ''என்ன வேண்டிக் கிடக்கிறது? இதில் எல்லாம் எனக்கு நம்பிக்கை இல்லை. என்னவோ இருக்கிறவரைக்கும் இருக்கிற இடம் தெரியாமல் இருந்துவிட்டுப் போகிற இடத்துக்குப் போய்ச் சேர்ந்து விட்டால் அதுவே போதும். நமக்கு இருக்கும் வாய்ப்புக்கு அதற்குமேல் என்ன?' என்று அவர் எண்ணம்.

ஆனால் அவள் மனம் அப்படிக் கேட்குமா? ஏதோ இந்தச் சாந்தி பண்ணினால் பீடை தொலையாதா? ஆனால் இதைப்பற்றி அவரோடு தர்க்கம் பண்ணவும் முடியாது. ஒரு விஷயத்தைப் பற்றி மறு பேச்செடுத்தாலே அவர் முதல் பேச்சை மனத்தில் ஆணியாய் அறைந்து கொண்டு விடுவார். அவ்வளவு சந்தேகி. சுபாவத்திலே வீம்பு படைத்த மனுஷர். அதிலும் தடுத்துப் பேசினால் உடம்பு அதிர்ந்துவிடுமோ என்று பயந்து பயந்து தணிஞ்சுபோய், போக்குப்படி விட்டுவிட்டு, அதன் பலனாய், காரணம், காரியம், நியாயம் எல்லாமே

அற்றுப்போய் வெறும் பிடிவாதம் மாத்திரம் ஊறிப்போச்சு. அதனாலே இதைப்பற்றி அவரோட பேசப்போய் முன்கோபத்தில் ஏதாவது சொல்லிவிட்டால் அதையெல்லாம் தாங்குற வயசோ தெம்போ அவளுக்கு இல்லை.

ஆகையினாலே ஒரு நாள் மத்தியான்னம், அவர் மாடியில் தூங்கிக் கொண்டிருக்கையில், பக்கத்தாத்துப் பிள்ளையைக் கூப்பிட்டு, ஒரு முக்காலணாக் கடிதாசை அவனிடம் கொடுத்துப் பஞ்சாமிக்கு எழுதச் சொன்னாள்.

"நான் சொன்னதாக அப்பாவிடம் சொல்லாதே. உங்கள் அப்பாவுக்குத் தெரியாமல் நான் செய்யும் காரியம் இது ஒன்றுதான்," அதைச் சொல்லுகையிலேயே அவளுக்கு அழுகை வந்துவிட்டது. நாணுப்பயல் சமர்த்து. பாட்டியைக் கவனிக்காததுபோல், வாசற்புறம் எதையோ பார்த்துக் கொண்டிருந்தான்.

"ஆனால் எனக்காக இல்லை. அவருக்காகத்தான். இந்தத் தள்ளாமையில், நாங்கள் உங்களில் யாரோடாவது தான் இருக்கணும். அதென்னவோ எங்களுக்கும் கொடுத்து வைக்கவில்லை. உங்களுக்கும் கொடுத்து வைக்கவில்லை. அவர் உடம்புக்கு வேண்டிய நிம்மதியும் காற்றோட்டமும் பட்டணத்து சந்தடியில் நாங்கள் எங்கே காணமுடியும்? எனக்கு அமிழ்ந்து ஸ்நானம் பண்ண அகண்ட காவேரிக்கும், காலையிலும் மாலையிலும் தரிசனம் பண்ண அகிலாண்டேசுவரிக்கும் நான் எங்கே போவேன்? அதனாலே, நாங்கள் இருக்கும் இடமே எங்களுக்கு சுகம் என்றாலும், இந்தச் சமயத்தில் நாங்கள் இரண்டு பேரும் சேர்ந்து இருக்கையிலேயே—

"இல்லை. ஒருவேளை நீயாவே, நான் இதை உன்னிடம் பிரஸ்தாபப்படுத்துவதற்கு முன்னாலேயே, எடுத்துச் செய்வதாக இருக்கலாம். ஆனால் என் அவசரம் எனக்குத் தாங்கவில்லை. அதனாலேயே நீயும் உன்

தம்பிமாரும் கலந்து ஆலோசனை பண்ணி, இந்த வைதிகக் காரியத்தை எப்படி நடத்தணுமோ, எப்படி அப்பாவை இதற்கு இணங்கப் பண்ணணுமோ அப்படிச் செய்யுங்கோ.''

எழுதினவுடனேயே பஞ்சமி உற்சாகமடைந்துவிட்டான். ஆனால் அப்த பூர்த்தியைப் பட்டணத்தில்தான் நடத்த வேண்டுமென்று பிள்ளைகள் ஒரே பிடியாய்ப் பிடித்தார்கள். ஏனெனில், பட்டணத்தில்தான் ஒரு நிமிஷ எச்சரிக்கையில் உப்பிலிருந்து கர்ப்பூரம்வரை எல்லாச் சாமானும் வீட்டு வாசற்படியண்டை கிட்டும். பட்டணத்தில்தான் நண்பர்கள் நிறைய வரமுடியும். பட்டணத்தில்தான் வேண்டியவர், வேண்டாதவர் எல்லோருமே இருக்கிறார்கள்.

''அவர்களுக்கு என்னடி குறைச்சல்? யானை மாதிரி ஜாம் ஜாமென்று தாங்குகிறதற்கு மூன்று பிள்ளைகள் இருக்கிறார்கள்'' என்று வயிறு குளிர்ந்து வாயார வாழ்த்துபவர்களைக் கேட்கப் பெருமையாக இருக்கிறது. உதட்டு நுனியில் அப்படிச் சொல்லிக்கொண்டு, வாழச் சகிக்காதவர்கள் உள்ளூறப்படும் வயிற்றெரிச்சலை உணருவதில் அதைவிட இன்பம் இருக்கிறது. அதற்காகவாவது, இந்த சமயத்தை விமரிசையாகக் கெண்டாட மூன்று பேர்களும் முஸ்தீப்பானார்கள். அவளுக்கே தன் பிள்ளைகளைப்பற்றி இப்படித் தோன்றுகிறது நன்றாக இல்லையானாலும், அவள் பிள்ளைகளை அவளைவிட வேறு யார் நன்றாக அறியமுடியும்? மூணும் மூணு தினுசு; மூணும் முரடு. ஒண்ணுக்கொண்ணு ஒத்துக்கொள்ளாது. அதுவும் கல்யாணம் ஆனதுமே ஒவ்வொருத்தனும் மூலைக்கொண்ணா பிய்ச்சுண்டதை நினைச்சால இப்போக்கூடச் சிரிப்பு வருகிறது. இதற்குப் பானை பிடிக்க வந்தவள் மேலே பழியைப் போடுகிறதா? இல்லாவிட்டால் பிள்ளைகளுக்கு ஏற்கனவே இருக்கும் சவரணை அவளுக்கு தெரியாதா?

திடீரென அவளைச் சுற்றி ஒரே கரகோஷமும் ரேழியிலிருந்து கெட்டிமேளமும் எழவே விழித்துக் கொண்டாள். அவள் மேல் புஷ்பமாரியும் மங்கல அட்சத்தையும் பெய்து கொண்டிருந்தன.

"பானகம்! பானகம்! வாங்கிக் கொண்டீர்களா? இந்தாருங்கோ, இந்தாருங்கோ, இன்னொரு தடவை இந்தாருங்கோ!"

"ஆனந்தம் ஆனந்த மாயனே!"

கழுத்துச் சங்கிலியில் மாட்டிக்கொண்ட புஷ்ப சரத்தைச் சாவித்ரி பிடித்து இழுத்தாள். அந்த வேகத்தில் கொண்டை அவிழ்ந்தது.

"இதென்ன, சாவித்ரி மாமி பின்னிக் கொள்ள வில்லையா என்ன? மாமாவுக்கும் குடுமியில்லை. எப்படியடீ முடிச்சுப் போடுகிறது?"

ஒவ்வொரு கல்யாணத்திலும் இதே வேடிக்கைதான், இதே வார்த்தைகள்தாம். ஆனால் அலுக்கிறது மாத்திரம் இல்லை. ஏனோ தெரியவில்லை.

"என்ன இது? மேல் வேஷ்டியை நெய்த் தொன்னையிலே தோச்சுண்டிருக்கேளே! அடடா! பட்டு, புத்தம் புதிசு!" என்று சாவித்ரி தன் கணவரைக் கடித்தாள்.

"இதென்ன மானங்கெட்டிருக்கேள் மாமி! தாலி கட்டி மூணு நிமிஷமாகவில்லை. அதற்குள்ளே மாமாவோடே உங்களுக்கு என்ன பேச்சு? பெரியவர்கள் நீங்கள் எல்லாமே இப்படி வழி காட்டினால் சிறிசுகள் நாங்கள் எப்படி இருப்போம்?"

இது சுந்தாதான். அவள் கிளப்பிவிட்ட சிரிப்பு கூடம் முழுவதும் குன்றிமணிகளை இறைத்தாற்போல் கிளுகிளுக்கிறது.

கல்யாணக்கூடத்தில் ஆளுயரத்திற்கு மாட்டியிருக்கும் கண்ணாடியில் தற்செயலாய் சாவித்ரியின் கண் விழுந்தது.

தன்னைப் பார்க்க அவளுக்கே சகிக்கவில்லை. தகடுமாதிரி குங்குமம், வேர்வையில் ஓரத்தில் அழிந்து மூக்கின்மேல் வழிந்து ஓடியிருந்தது. தலைமயிரெல்லாம் ஒரே பரட்டை. அதில் பூவிதழ்களும் அட்சதையும் ஒட்டிக்கொண்டிருந்தன. புதுப்புடவை உடம்பில் மூலைக்கு மூலை அசிங்கமாய்ப் புஸு புஸுவெனப் பிதுங்கிக்கொண்டு ஏற்கனவே உள்ள பருமனை மிகைப்படுத்திக் காட்டிற்று. தன்னையும் அறியாமல் ஒரு வெட்கம் அவளைப் பிடுங்கிற்று. தலை கவிழ்ந்தாள்.

"ஐயோடீ! எல்லோரும் மாமியைப் பாருங்கள்! மாமிக்கு வெட்கம் வந்துவிட்டதடீ!"

"எடுஎடு முகூர்த்தத் தேங்காயை, பஞ்சாமி! ஒருத்தரையும் விட்டுவிடாதேங்கோ. சின்னவர்கள் பெரியவர்கள் வித்தியாசம் பார்க்க வேண்டாம். இங்கே வந்தவர் யாரா இருந்தாலும் சரி, வெறுங்கையோடும் வெறும் வயிற்றோடும் போகக்கூடாது. ஆமாம், சொல்லி விட்டேன்!"

யார் இந்த சவால் அடிக்கிறது? ஓஹோ, சிவராஜனா?

"நன்னாச் சொல்லு, சிவராஜா! காசுபணம் இன்னிக்கு வரும்; நாளைக்குப் போகும். இந்த சமயம் வருமாடா? நீங்கள் எல்லோரும் சௌக்கியமாய் இருந்து இத்தோடு போகாமல் உங்கள் அப்பா அம்மா இரண்டு பேருக்கும் சதாபிஷேகம் பண்ணவேணும். இதைத்தான் இப்போ நான் தெய்வத்தை வேண்டிக்கறேன்!"

அதுக்கும் மீனுப்பாட்டி, நீங்கள் வந்து அவர் களையும் எங்களையும் ஆசீர்வாதம் பண்ணவேணும்."

ஒரே சிரிப்பு. ஏனெனில் மீனுப்பாட்டிக்கு இப்போ, வர ஐப்பசிக்கு வயசு எழுபத்தெட்டு பூர்த்தியாகிறது.

"அதென்னடா அப்படிச் சொல்லீட்டே? உங்கள் கையாலே சதாபிஷேகம் பண்ணிக்க அவளுக்கு கொடுத்து

வெச்சிருந்தால், அந்த முகூர்த்தத்தைப் பார்க்க எனக்கு மாத்திரம் கொடுப்பனை இருக்காதா என்ன?''

''பாட்டி, எல்லாம் உங்கள் ஆசீர்வாதம். முன்னால் அவர்களுக்குச் சதாபிஷேகம் பண்ண எங்களுக்குக் கொடுத்து வைக்க வேணுமே, அதைச் சொல்லுங்கள்.''

இப்போது இவ்வளவு பதவிசாய்ப் பேசும் சிவராஜன், ஒரு பத்து வருஷங்களுக்கு முன்னால் அவளிடம் சொன்ன வார்த்தைகள் திடீரென நினைவின் பின்னணியிலிருந்து அசரீரி மாதிரி எழுந்ததும் சாவித்ரி தன்னை அறியாமல் களுக்கெனச் சிரித்துவிட்டாள்.

''என்னம்மா சிரிக்கிறாய்?'' என்றான் சிவராஜன், சற்றுத் திகைப்புடன்.

''ஒண்ணும் இல்லை, சீவாச்சு! என்னவோ நினைப்பு வந்தது.''

அப்போது சிவராஜனுக்குக் கல்யாணமான புதிது. இளந்தம்பதிகளைப் புதுக் குடித்தனம் வைக்க அவள் கிராமத்திலிருந்து பெங்களூருக்குப் போயிருந்தாள் அங்கு ஒரு பத்து நாள் தங்கும்படி நேர்ந்தது. புது நாட்டுப் பெண்ணை நம்மகத்துக் காரியத்துக்குப் பழக்கி வைக்க வேண்டாமா?

அந்த சமயம் ஒரு நாள் நாட்டுப்பெண் தோசைக்கு அரைத்துவைத்த மாவை சரியாய் மூடவில்லை. மாவு அசிங்கமாய் வெளியில் பொங்கி வழிந்திருந்தது. அதற்கே முனகிக்கொண்டு சாவித்ரி மாவைக் கிளறுகையில், ஒரு செத்த பல்லி விறைத்த வாலுடன் நடு மாவிலிருந்து கிளம்பிற்று. சாவித்திரிக்கு அருவருப்பின் பயங்கரத்தில் உடம்பெல்லாம் புல்லரித்தது.

''ராஜம்!''

''ராஜம்!''

''இருங்கோ அம்மா!''

ராஜம் கண்ணாடிக்கு எதிரில் வெகு காரியமாக இருந்தாள். கொண்டைமேல் மல்லிகைச்சரம் வளைவாய்ப் பதியவில்லை. காதோரம் ஒரு மயிரை எஃகுச் சுருளாக்க முயன்று கொண்டிருந்தாள். ராஜிக்கு மிகவும் நெஞ்சீரல். கண்ணாடியில் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சரிபண்ண முயன்றுகொண்டிருந்தாள்.

''ராஜம், அலங்காரம் அப்புறம் பண்ணிக் கொள்ளலாம். உடனே வா, இங்கே!''

கனவு கடுமையாய்க் கலைந்த விழிகளுடன் ராஜி வந்தாள். அப்போதே, தாழ்வாரத்து வாசல் வழி சிவராஜன் சமையலறையில் நுழைவதற்கும் சரியாக இருந்தது. அம்மா முகத்தின் கடுகடுப்பையும் ராஜியின் முகத்திகைப்பையும் மாறி மாறிப் பார்க்கையில் அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

''என்ன அம்மா?''

அம்மாவையும் பிள்ளையையும் சேர்ந்தாற்போல் கண்டதும் ராஜியின் நெற்றியும் கன்னங்களும் கழுத்தும் சிவப்பு லாந்தரைத் தூக்கிப் பிடித்தாற்போல் குங்குமமாய்ச் சிவந்தன. ராஜத்தின் மேனி ஏற்கெனவே நல்ல சிவப்பு. வெறும் வெளிறிட்ட சிவப்பல்ல; அழகுச் சிவப்பு, பழுத்த நெற்கதிர்களின்மேல் படும் பொன் வெயிலின் தகதகக்கும் சிவப்பு.

''என்ன ராஜம்?''

சிறைப்பட்ட பறவையின் சிறகுகள்போல் ராஜத்தின் கண் இமைகள் படபடவென்று அடித்துக் கொண்டன. கனவு கலைந்த விழிகளிலிருந்து அந்தக் கனவே உருகிக் கனந்தாங்காது விழியோரங்களிலிருந்து வழிந்து அவள் கணவன் இதயத்துள் சொட்டி விழுந்து, விழுந்த இடங்களை தஹித்தன. சிவராஜனுக்கு உடல் பரபரத்தது.

''ராஜம், மாடிக்கு வா!''

கவிழ்ந்த தலையுடன் ராஜம் அவளை மாடிக்குத் தொடர்ந்தாள். கொண்டையில் வில்லாய்ச் செருகிய மல்லிகையின் மணம் கம்மென்று சாவித்ரியின்மேல் மோதியது. சாவித்ரி அப்படியே திகைத்து நின்றாள். முற்றத்தில் மரத்தொட்டி ஜலத்தில், நன்றாய்ச் சிறகுகளைக் கோதி, மூக்கை உள்ளேவிட்டு அலசி ஆற அமர ஒரு காக்கை குளித்துக் கொண்டிருந்தது. அதை ஓட்ட வேணும் என்று உள்நினைவில் ஓர் எண்ணம் எழுந்து அவளைத் தூண்டிக்கொண்டிருந்ததே தவிர, அதைச் செயலாக்க உடல் மறுத்துவிட்டது. அதன்மேல் திடீரென ஓணான் கொடி படர்ந்தது; மேலே சிலந்திக்கூடு கட்டி, பூஞ்சைக்காளானும் பூத்து விட்டாற்போல் அவ்வளவு புராதன உணர்ச்சி படர ஆரம்பித்தது. முற்றத்தில் ஒரு மஞ்சள் பூனை, மஞ்சள் வெயிலில் வெகு சுகமாய்க் கால்களை நீட்டியபடி உறங்கிக்கொண்டிருந்தது.

மாடியிலிருந்து யாரோ கீழிறங்கி வரும் அரவம் கேட்டது. தன்னை அழுத்தும் சோர்வைப் பிரயத்தனத்துடன் உதறி விட்டு, சாவித்ரி அடுப்பண்டை போய் அதில் கொதித்துக் கொண்டிருக்கும் சாதத்தைக் கரண்டியில் எடுத்துப் பதம் பார்க்கலானாள் ஊரில் சாதத்தைக் கண்ணால் பார்த்தே பதம் சொல்லிவிட முடியும். ஆனால் இந்த அரிசியைக் கையால் நசுக்கிப் பார்த்தால்கூட ஆளை ஏமாற்றிவிடுகிறது!

''அம்மா!''

சாவித்திரி திரும்பிப் பார்த்தாள். சிவராஜன் வாசற்படியை அடைத்துக்கொண்டு நின்றான். அவள் பிள்ளைகளுக்குள்ளேயே அவன்தான் வாளிப்பு. அதுவும் இப்போ மாதிரி ஜிப்பாவையும் போட்டுக்கொண்டு சுவர் மாதிரி வெளிச்சத்தையும் மறைத்துக்கொண்டு நின்றுவிட்டால் ஒதுங்குடா என்று யாராலும் சொல்லாமல் இருக்க முடியாது.

"அம்மா!"

முகத்தில் கேள்வியோடு அம்மா தலை நிமிர்ந்தாள்.

"அம்மா! இதோ பார். நாங்கள் சிறிசுகள். எங்களை நீ விட்டுத்தான் பிடிக்கவேண்டும். நாங்கள் தெரிந்தோ தெரியாமலோ எங்கள் நடத்தை உனக்கு ஒரு சமயம் பிடித்திருக்கலாம். ஒரு சமயம் பிடிக்காமலும் இருக்கலாம். ஆனால் எங்களை நீ விட்டுத்தான் பிடிக்கவேண்டும். உன் வயசில் நீயும் எங்கள் வயசில் நாங்களும்— இரண்டும் ஒன்றாய்ப் போய்விடுமா? நீ சிலவற்றைக் காதில் போட்டுக் கொள்ளாமலும் கண்ணில் கண்டுகொள்ளாமலும் இருந்தால்தான் நல்லது. என்னவோ நான் சொல்கிறதைச் சொல்லிவிட்டேன். அப்புறம் உன் இஷ்டம்.

கூடைமண்ணைச் சாய்ப்பது போல் வார்த்தைகளைக் கொட்டிவிட்டு 'விர்'ரென்று சிவராஜன் மாடிக்குப் போய் விட்டான். சாவித்திரி கல்லால் அடித்தாற்போல் நின்றாள். திகைப்பு அவளைத் திணற அடித்தது.

முற்றத்தில் மரத்தொட்டியின் விளிம்பில் ஒரு சிட்டுக் குருவி உட்கார்ந்து வெகு உற்சாகமாக அரட்டையடித்துக் கொண்டிருந்தது. உறங்கிக் கொண்டிருந்த பூனை 'சரேல்' எனப் பாய்ந்தது. அது படுத்திருந்ததற்கும் பாய்ந்ததற்கு மிடையில் இடைவேளை இருந்ததாகவே தெரியவில்லை. அதன் மின்வெட்டில் பூமியில் பாதங்கள் படாமல் அது பறந்த மாதிரியே இருந்தது.

'கிறீச்!—'

தொட்டி விளிம்பிலிருந்து எழும்பிய வேகத்தில் குருவி யின் சிறகுகள் பூனையின் முகத்திலேயே மோதின. அந்த அதிர்ச்சியில் பூனைக்குக் கழுத்து உள்வாங்கிற்று. குருவி வெந்நீர் அறையின் சுவர்க் கட்டைமேல் உட்கார்ந்து கொண்டு 'வளவள'வெனப் பூனையைத் திட்டிற்று. அசடும் திகைப்பும் முகத்தில் வழியும் பூனை தன் வேகமும் பொலிவும் இழந்து நின்றது.

சற்று நேரம் அல்லது எத்தனை நேரமோ கழித்துச் சிவராஜன் கீழே இறங்கி வருகையில், அவனுக்குச் சமையல் அறையில் நேர்ந்த சம்பவமே மறந்துவிட்டது. உள்நாக்குத் தெரிய வாயைத் திறந்து சிரித்துக் கொண்டே கீழிறங்கி வந்தான். ராஜி ஏதோ அவ்வளவு வேடிக்கையாய்ப் பேசியிருந்தாள். ஆகையால் அந்தச் சமயத்தில் கொடிப் புடவையை இழுத்து மடித்து அம்மா பெட்டிக்குள் வைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் அவனுக்குத் 'திக்'கென்றது.

''என்னம்மா?''

அம்மா அவனைப் பார்க்கவில்லை. தன் காரியத்தில் முனைந்தபடியே, ''ஊருக்குப் போகப் போறேன், இன்னி ராத்திரி வண்டிக்கு'' என்றாள்.

''ஏன் அம்மா?''

''இப்போத்தான் நினைப்பு வந்தது—'' அம்மா பெட்டி மூடியை முழங்காலால் அழுத்தித் தாழ்ப்பாளை வெற்றியுடன் போட்டாள்: ''மந்தையிலிருந்து வந்த மாட்டை தறியில் கட்ட மறந்துட்டேன். அது மல்லிகைச் செடியை என்ன பண்ணிருக்கோ!''

சிவராஜனுக்குத் திகைப்பு இன்னும் அதிகரித்தது.

''என்ன அம்மா, பத்துநாள் கழித்து இப்போது நினைப்பு வந்தால்?''

சாவித்திரி வாய்விட்டுச் சிரித்துவிட்டாள். ''அட அசடே, ஊருக்குப் போறதுக்கு அது ஒரு சாக்குடா. மாட்டை கட்டாமல் விடுவேனாடா? வா வா, கிளம்பு; என்னை ரெயிலேத்தி விட்டுவிடு. இன்னும் பதினஞ்சு நிமிஷம்தான் இருக்கு ஊஹுூம். சாப்பிட நேரமில்லை. போற வழியிலே இரண்டு வாழைப்பழத்தை உரிச்சுப் போட்டுண்டாப் போறது. விடிஞ்சால் காபிக்கு 'டான்'னு ஊர்—''

என்ன தடுத்தும் அவள் கேட்கவில்லை. ரெயிலில் ஏறி உட்கார்ந்த பிறகு சிவராஜனுக்கு என்ன தோன்றிற்றோ தெரியவில்லை. குரலில் கண்ணீர் மல்க, ''நான் ஏதாவது பதட்டமாகப் பேசியிருந்தாலும் நீ பாராட்டாதே, அம்மா!'' என்றான்.

''அட போடா அசடே! உன்னோடே எனக்கு என்னடா கோபம்?'' உண்மையிலேயே அவளுக்கு அப்போது கோபம் இல்லை. ''நான் அப்பாவைத் தனியே விட்டுவிட்டு இங்கேயே உட்காந்துண்டிருக்க முடியுமா?''

ரெயில் நகர ஆரம்பித்துவிட்டது. ''உடம்பை ஜாக்கிரதையாய் பார்த்துக்கொ. ராஜியை வெள்ளிக் கிழமை மறக்காமல் எண்ணெய் தேய்ச்சுக்கச் சொல்லு—''

இரு மருங்கிலும் சுழன்று ஓடும் வயற்புறங்களிலிருந்து காற்று சில்லென்று முகத்தின் மேல் மோதுகையில் உண்மை யிலேயே சாவித்ரிக்கு ஏதோ அடைப்பிலிருந்து விடுதலை யானாற் போலிருந்தது.

அப்போதிலிருந்தே பிள்ளைகளிடம் தங்கி வாழும் சபலத்தை, எண்ணத்தையே சாவித்ரி விடுத்தாள். ஒரு அநுபவமே போதும், ஒவ்வொரு பிள்ளையிடமாகப் போய் ஒவ்வொரு பரீக்ஷையாய்ப் பட மனம் மறுத்துவிடடது.

ஆனால், தெரிந்தோ தெரியாமலோ சிவராஜன் ஒரு விஷயத்தில் உண்மையைத்தான் சொன்னான். அவர்கள் சிறியவர்கள். அவர்களின் காலமும் வழிகளுமே வேறு. இந்தக் காலத்துடன் ஒத்துப்போய் அவர்களை ஓடிப் பிடிப்பது என்பது இயலாத காரியம். அதனால் வயசானவர்கள் நாம் மூச்சுத் திணறி மார்பு வெடிக்காமல் இருக்கவேணுமானால் பின் தங்கி விடுவதுதான் நல்லது. நாம் எப்படியும் பின் தங்கித்தான் விடுவோம். நமக்கு மிஞ்சுகிறது நம் தனிமைதான். நம் தனிமை மாத்திரம் அல்ல, நாம் எந்த வழி வந்தோமோ அந்த வழியினுடைய தனிமையேதான். நாம் எந்த வழி வந்தோமோ அந்த வழி

வந்து நம்முடைய ஸகாப்தத்தின் முடிவை அடைந்து விட்டோம். அதை அடைந்தபின் அதை விட்டுத் தப்பியோட முடியுமா? அதுதான் நம்மை விடுமா? நம்முடைய நிலைக்கு அதை ஏற்பதுதான் நல்லது.

இதோ இன்னொரு பிள்ளையை ஊருக்கு வழி அனுப்பி விட்டு வாசற்படியில் நிற்கையில் இந்தத் தனிப்பட்ட தனிமையை திக்கற்ற தனிமையைச் சாவித்திரி நடுமுதுகு சில்லிடச் சட்டென உணர்ந்தாள். இனி எப்பவோ? மறுபடியும் பார்க்கற போதுதான். பார்த்தவரைக்கும் லாபம். செல்லப்பாவுக்கு ராணுவத்தில், அதுவும் விமான நிலையத்தில் வேலை. யார் போனாலும் போகாவிட்டாலும் அவன் கண்டிப்பாய்ப் போயே தீரவேண்டும். ஆகையால் அவன் போய்விட்டான்.

சிவராஜன் மத்தியான வண்டிக்கே கிளம்பிவிட்டான். நேரே உத்தியோகத்துக்குப் போவதாய்ச் சொன்னாலும் அவன் அங்கே போகவில்லை என்று அவளுக்குத் தெரியும். போகும் வழியில் மாமனார் வீட்டில் இறங்கி ஒரு வாரமாவது 'டேரா' போட்டுவிட்டுத்தான் போவான்.

சிவராஜனுக்கு இன்னும் சந்ததி உண்டாகவில்லை. கல்யாணமாகி ஐந்தாறு வருஷங்களுக்கு மேலாகிவிட்டன. ராஜி ஏதோ ஒரு தினுசில் அவன் உயிர் நாடியையே பற்றியிருந்தாள். இந்த ஐந்தாறு வருஷங்களுக்குள் சிவராஜனுக்கு முன் மயிரிலும் பக்கவாட்டிலும் அலை நுரை போல் அடையாய் நரை ஓடியிருந்தது. கால வடுக்கள் தனித்தனியாய்த் தம் தம் இடங்களை முகத்தில் செதுக்கிக் கொண்டிருந்தன. பெற்ற வயிறு என்றதனாலோ என்னவோ, சிவராஜனுக்கு வருடங்களின் மூப்பு ஏற ஏற ராஜந்தான் அவன் இளமையை வாங்கிக் கொண்டு ப்ரகாசிப்பது போல் சாவித்ரிக்குத் தோன்றிற்று. இப்போது கூடத்தான் வந்திருந்தாளே, ராஜம் அன்று கண்ட மேனிக்கு அழிவில்லாமல்தான் இருந்தாள். ஒரு

பருமனோ, இளைப்போ, நிறக் குறைவோ, கூந்தலில் குட்டையோ ஊஹூம்! அந்தச் சிவப்புத்தான் என்ன சிவப்போ! எச்சில் முழுங்கினால் அது நெஞ்சுக்குள் இறங்கறது தெரியும்.

இன்னும் இரண்டு நாள் குழந்தைகளோடு சேர்ந்து இருந்து பழைய நாட்கள் போல் தன் கையாலேயே அவர்களுக்குச் சமைத்துப் போட்டு அவர்கள், "பேஷ் பேஷ்! அம்மாதான் சாப்பிடாவிட்டாலும் வெங்காய சாம்பார் எவ்வளவு ஜோராய்ப் பண்ணுகிறாள்!" என்று நாக்கைக் கொட்டிக் கொண்டு தொண்டை வரையில் வாயுள் கையை விட்டுக்கொண்டு சாப்பிடுவதைப் பார்த்து மகிழவேண்டுமென்றுதான் அவளுக்கு ஆசை. ஆனால் எது கேட்கிறது? திக்குக்கு ஒன்றாய் அது அது புறப்பட்டுக் கொண்டிருக்கிறதே! பெற்ற நாலும் நாலு—

திடீரென்று சாவித்ரிக்குக் கண்கள் இருண்டன. தலை 'கிர்'ரிட்டது. வாசற்கதவின் கம்பிகளைப் பிடித்தபடி சரிந்தாற்போல் வாசல் படிக்கட்டின்மேல் உட்கார்ந்தாள். இருள் வளையங்கள் ஒன்றிலிருந்து ஒன்றாய்ப் புறப்பட்டு ஒன்றுடன் ஒன்று கோத்துக்கொண்டு அவளை வளைத்துப் பின்னிக் கொண்டன. கருமேகங்கள் திடீரெனப் பந்து பந்தாய்க் கக்கிக் கொண்டு வந்து அவள் மேல் கவிந்தன.

"ஞொய்ங்— ங்... ங்ங்ங்"

குளவியின் ரீங்காரம்போல் எஃகுத் தந்தி நாதத்தினும் ஸன்னமான ஒரு சப்தம் அந்த இருள் பந்துகளிலிருந்து கிளம்பி மடமடவென வீங்கிச் சமுத்ரகோஷமாய்க் காதண்டை இரைந்தது. அந்தப் பேரிரைச்சலிலிருந்து இரு சப்தங்கள் மாத்திரம் பிரிந்து வந்து மோதின.

"ஜம்பூ! ஜம்பூ!"

"அம்மா! அம்மா!"

சாவித்ரி இரு செவிகளையும் பொத்திக் கண்ணை இறுக மூடிக்கொண்டாள். இமைத் திரையில் ஒரே ஜனப்ரளயம் பெருகிற்று. மயிலாப்பூர் அறுபத்துமூவர் உற்சவம். மாட வீதித் திருப்பத்தில் நெரிந்த கூட்டத்தில் அவளும் ஜம்புவும் அகப்பட்டுக் கொண்டு விட்டனர். அலை மாதிரி இன்னொரு பெரும் ஜனத்திரள் அவர்கள் மேல் மோதிற்று. அவள் பிடியிலிருந்து குழந்தையின் கைப்பிடி பிய்த்துக் கொண்டு பிரிந்து போய்க்கொண்டே யிருக்கும் அவஸ்தையை அவள் அப்போது அநுபவித்துக் கொண்டிருந்தாள்.

''ஐயோ, என் குழந்தை!—''

''அம்மா! அம்—''

இன்னொரு ஜன அலை வெகு வேகமாய்ப் புரண்டு வந்து ஜம்புவை அடித்துக்கொண்டு போய்விட்டது. குழந்தை முகங்கூடக் காண முடியவில்லை. அதற்குள் பல்லாயிரம் தலைகள் இடைமடுத்து விட்டன.

''ஜம்பூ— ஊ— ஊ!''

திடீரென இமைத்திரையின் படம் சட்டென அறுந்து திரை பளிச்சிட்டது. ஜனசமுத்ரத்தின் கோஷம் சட்டென ஓய்ந்தது.

சாவித்ரி மெதுவாய்க் கண்களைத் திறந்தாள். முகத்தில் ஸ்நானமாய்க் கொட்டியிருந்த வேர்வையை முன்றானையால் துடைத்துக் கொண்டாள். வெகு தூரத்தி லிருந்து ஓடி வந்தாற்போல் மூச்சு இரைத்தது. பிரிந்து வந்து நெற்றிப்பொட்டில் காற்றாடும் இரண்டு மயிரைக் காதோரம் அடக்கினாள்.

தெருவில் ஒருவரும் இல்லை. வாசல் லாந்தர் கம்பம் மாத்திரம் தன்னடக்கமான வெளிச்சத்தைத் தெருவில் தெளித்துக்கொண்டு, அவள் சுமார் முப்பத்தைந்து வருஷங் களுக்கு முன்னால் நேர்ந்த நனவை இப்பொழுது

கனவாய்க் கண்டுகொண்டிருப்பதற்கு மௌன சாக்ஷியாய் நின்றுகொண்டிருந்தது.

பட்டணத்தையே சல்லடை போட்டுச் சலித்தாகி விட்டது. வீடுவீடாய்ப் படியேறிப் பார்த்தாகிவிட்டது. ஊரில் தேடாத போலீஸ் ஸ்டேஷன், குளம், சத்திரம், ஆஸ்பத்திரி பாக்கி இல்லை. பத்திரிகைகளில் விளம்பரம் செய்து ஆகிவிட்டது. மனித யத்தனத்தில் செய்வதில் பாக்கி ஒன்றும் இல்லை. அன்று அவன் மாதிரி எத்தனை பேருக்குக் குழந்தை கெட்டுப் போயிருக்கும்? அவர்களுக்கு எல்லாம் அகப்படவில்லையா? ஆனால் அவளுக்கு மாத்திரம் அவன் குழந்தையின் சுவடு கூடப் பிடிபட வில்லை.

அன்றைத் தினம் அவளை வீட்டில் கொண்டு வந்து சேர்ப்பதற்குள் நாலு ஆண்பிள்ளைகள் சேர்ந்து கட்டிப்பிடிக்க முடியவில்லை. தாய்மை தவிக்கையில் அதற்குத்தான் என்ன அசுர பலம் வந்து விடுகிறது! ஓர் அறையுள் தள்ளிக் கதவை வெளியில் பூட்டிவிட்டார்கள்.

"ஜம்பூ! ஜம்பூ! ஐயோ! என்னை வெளியே விட்டுடுங் களேன்! ஜம்பூ! ஜம்பூ! ஜம்பூ!"

அந்த ஒரே அலறல் தான்.

ஜன்னல் பக்கமாய் யாராவது எதையாவது நீட்டினால் தட்டோ தம்ளரோ யாரென்று பார்க்காது வீசி எறிவாள். சுவரிலும் ஜன்னல் கம்பிகளிலும் மண்டையை மோதிக் கொள்வாள். நெற்றி புடைத்துக்கொண்டு ரத்தம் கசிவது கூட அவள் அறிவாள். சமுத்திரம் பற்றிக்கொண்டு விட்டபின் அதை அணைப்பது யார்? அதுவாக அணைந்தால்தான் உண்டு.

நாலு நாட்கள் சேர்ந்தாற்போல் அன்ன ஆகாரம் ஜலபானம் இல்லை. வெறி உடலைச் சூறையாடிவிட்டது.

அலறி அலறித் தொண்டை கம்மிப்போய்க் குரல் உள்ளுக்கு இழுத்துக்கொண்டது. மூர்ச்சையானாள்.

நினைவு கூடுகையில் சுற்றி இருட்டியிருந்தது. யாரோ அவளைத் தன் மார்பில் சாய்த்துக்கொண்டு குழந்தைக்குப் புகட்டுவது போல் வாயுள் ஏதோ ஆகாரத்தைச் செலுத்திக் கொண்டிருந்தார். அந்த உப்பும் புளிப்பும் நாக்கைப் பிடிக்கையில், அந்த இதமான குளுமை திரிபோல் வயிற்றுள். இறங்குகையில் அது உயிர் கொடுக்கும் மோர் என்று உணர்ந்தாள். கண்ணை மலர்த்திப் பார்க்கையில் தன்னைத் தாங்கிக்கொண்டிருப்பவர் தன் கணவர் என்று கண்டாள். உடனே பழைய நெருப்புத் துடித்துப் பற்றிக் கொண்டு குதித்து எழுந்தது.

"ஜம்பூ! ஜம்பூ! நம்ப ஜம்பூ?"

அவர் உடல் வெடவெடவென உதறிற்று. அவள் பிடரியில் இரண்டு துளிகள் விழுந்தன. முழுகிப் போய்க் கொண்டிருப்பவள் பிடியில் அவரைக் கட்டிக்கொண்டாள்.

இனிமேல் ஜம்பூ இல்லை. அன்றைக்குத் தலைவாரிப் புதுச் சொக்காயும் ட்ராயரும் போட்டுக் குழந்தை ஆசைப்பட்டானே என்று கண்ணுக்கு மையிட்டுக் கையைப் பிடிச்சுண்டு எல்லோரோடும் உற்சவத்துக்குக் கிளம்பி னோமே, அன்றோடு ஜம்பு சரி. இனிமேல் ஜம்பு இல்லை.

இல்லை. அப்படிச் சொல்வதும் தப்பு ஜம்பு இருந்து கொண்டே இல்லை. இல்லாமலே இருந்துகொண்டிருக் கிறான். நிஜமாகவே குழந்தை எங்கேயாவது வளர்ந்து கொண்டிருக்கானோ. இல்லாவிட்டால்— இல்லா விட்டால்?—

நெஞ்சு நினைத்தாலும் அந்த நினைப்பின் வார்த்தைகள் நாக்கு நுனியில் உருவாகித் தங்குகிறபோது, இதோ வாய்க்குள்ளேயே நாக்குக் கூசித் துடிக்கிறது.

வயிற்றிலே ஜ்வாலை கொழுந்து விட்டுக்கொண்டு கிளம்பு கிறது.

இருந்தால் என்ன? நட்டதெல்லாம் பயிராகிவிடறதா? எல்லாத் தாயாருமே தாம் பெற்ற குழந்தை கைக் கொள்ளியை வாங்கிக் கொள்கிறார்களா? அதைவிட அக்கிரமங்கூட இருக்கு. இதோ கிராமத்திலே சீதா மாமி இருந்தாள். ஒரே பிள்ளை. தூரதேசத்திலே பிள்ளைக்கு உத்தியோகமென்று அவனோடே போய் மூணாவது மாசம் ஒண்டியாக வெறுங்கையை வீசிக் கொண்டு வந்து விட்டாள். பிள்ளை செத்துத்தான் போய்விட்டான் என்றாலும் வேறே ஆண் பிள்ளைத் துணையில்லாமல் தானே மயானம் போய், தான் பெற்ற பிள்ளைக்குத் தானே தன் கையாலேயே கொள்ளியிடும்படி ஆகிவிட்டது. கொள்ளியென்ன கொள்ளி, பெற்ற வயிற்றுச் சதையை ஒரு கொத்துப் பிடுங்கிப் போட்டாலும் பற்றிக் கொள்ளும்.

ஆனால் அந்த மாதிரி சோகங்களிலிருந்து மீட்சியிருக் கிறதோ இல்லையோ, அவற்றிற்கு ஒரு தீர்மானம் உண்டு, போனவன் இனிமேல் திரும்பி வரமாட்டானென்று. இது மாதிரி என் ஜம்பு இருக்கிறானோ— இல்லையோ? இருக்கிறானோ? வருவானோ— மாட்டானோ? என்று வேகாமலே வெந்து கொண்டு சாகாமலே செத்துக் கொண்டு இருக்கிற கோரம் கிடையாது மரத்திலே பாய்ந்த கோடாலியை எடுக்காமலே மரம் மேலே வளர்ந்து மூடிவிட்ட மாதிரி, இதைக் கடைசியில் தன்னையும் சிதையில் அடுக்கும்வரைத் தாங்கித் தகித்துக்கொண்டிருக்க வேண்டியதுதான்.

செத்துப்போய் யமதர்மராஜன் உயிரை இழுத்துக் கொண்டு போகிறபோது, அவனை எப்படியும் ஒரு வரம் மறக்காமல் கேட்கணும்: "அப்பா, பெரிய மனசு பண்ணி என்னை ஒரு நிமிஷம் அம்பாள் சந்நிதானத்துக்கு அழைச் சுண்டு போ" என்று. அப்படி அவன் தன்னைக் கொண்டு

போய் சந்நிதானத்தில் விட்டால் அம்பாளை அவசியம் ஒரு கேள்வி கேட்டாகணும்: "ஏண்டி அம்மா? ஆனைக் காவலில் அகிலாண்டேசுவரியாய் எழுந்தருளியிருக்கும் உலகத்தாயே! இந்தக் குழந்தை எனக்குப் பிறக்கிறதற்கு முன்னாலே இரண்டு தங்கவில்லையென்று உன் வயிற்றைக் குளிர்விக்க, கற்பாந்த காலமாய் உன் காலடியிலே ஊறிண்டுருக்கிற ஜலம் போதாதுன்னு, தினம் கிழக்குப் பூக்கிறதுக்கு முன்னாலே எழுந்திருந்து ஆத்திலிருந்து ரெண்டு மைல் அகண்ட காவிரிக்கு நடந்து ஸ்நானம் பண்ணிவிட்டு அப்படியே பற்றின மஞ்சளும் ஈரப்புடவையுமாய் ஒரு தவலை ஜலம் இடுப்பில் தாங்கி வந்து உனக்கு அபிஷேகத்துக்கு ஒரு மண்டலம் கொண்டு வந்து வெச்சேனே! இந்தக் குழந்தையை இப்படிப் பிடுங்கிக் கொள்ள வேணும்னுதான் அப்போ அப்படிக் கொடுத்தையா?"

பிறகு வெகு நாட்களுக்கு அவளைக் காலைக் கடன் களுக்குக் கூடத் தனியாய் விடாமல் அடைகாத்து வந்தார்கள். சில வார்த்தைகளின் சப்தங்கள்கூட அவளுக்கு ஆகாமல் இருந்த நாட்கள் உண்டு. ஜம்பு நாவல் பழத்தை எவ்வளவுக்கு எவ்வளவு ஒரு தரம் உயிராய் விரும்பி னாளோ, அவ்வளவுக்கு அவ்வளவு கண்ணால் காணக் கூடச் சகிக்க முடியவில்லை. 'ஜம், ஜம்பம் ஜமாய்' இம்மாதிரி வார்த்தைகள், பேச்சு வழியில் ப்ரயோகம் ஆகி விழும் ஒலிகள்கூட ஜம்புவின் பேரை நினைவூட்டிவிடும். பசி, தாகம், பொழுது, அடையாளம் எதுவுமே உணர முடியாத நீண்ட சிந்தனையில் அவ்வொலிகள் ஆழ்த்தி விடும்.

ஆனால் ஜம்புகேசுவரத்தில் ஜம்புநாதனை விட்டு, அகிலாண்டேசுவரியை மாத்திரம் தனியாய்த் தரிசிக்க முடியுமா?

இப்போதுகூடச் சில சமயங்களில் ஸந்நிதானத்தில் நிற்கையில் கண்ணெதிரில் தூரிஞ்சில் பறந்தாற்போல்,

மனசுக்குள்ளே ஏதோ நிழல் தட்டி மறையும். அப்போது என்னவென்று புரியாவிட்டாலும் இந்த நிமிஷத்திலே தோன்றுகிறது ஐம்பு என்கிற எண்ணத்தின் இறக்கை தானோ அது?

எப்படி இருந்தால் என்ன? பிள்ளையைப் பிடுங்கிக் கொண்டு விட்டாலும், அவள் கொடுத்தாள், அவள் எடுத்துக் கொள்கிறாள். புருஷனையாவது இதுவரையில் தன்னோடு விட்டு வைத்திருக்கிறாளே, அதற்காவது அவளைத் தினம் வணங்கியாக வேண்டாமா? தினம் அகண்டத்தில் நெய்த்திரி போடவேண்டாமா?

கஷ்டத்தைப் பெண்கள் ஒரு தினுசாய் அனுபவிக்கிறார்களென்றால், புருஷர்கள் அதைத் தாங்குகிறது இன்னொரு தினுசாய் இருக்கிறது. பெண்களை மனக் கஷ்டம் வெளிப்படையாய் எரித்தால், புருஷர்களை அது ஸ்புடம் போட்டுத் தின்கிறது. அன்றையிலிருந்தே அவர் உள்ளூற ஒடிந்துவிட்டாரென்று சொல்லலாம். நாள் ஆக ஆக, அவர் உடம்பு தேயத் தேயத்தான் அந்த உள் ஒடிப்புத் தெரிகிறது. இத்தனைக்கும் அவர் அந்த விஷயத்தைப்பற்றிப் பேசுகிறதுகூட இல்லை. ஆனால் அதுதான் அவரைக் கவ்விக்கொண்டிருந்தது. அவர் உடம்பின் கோளாறே அதனால்தான்; அதுவேதான்.

தம் ஆண்மையை எந்தக் கஷ்டத்திற்கும் விட்டுக் கொடுக்கக்கூடாது. தாம் எதையுமே சட்டை செய்யக் கூடாது என்கிற வீறாப்புத்தான் இருந்ததே தவிர, தாங்குவதற்கு வேண்டிய பலம் இல்லை.

அதனால் அவருடைய சிறு சிறு கோபங்களும் சீண்டல்களும் பல சமயங்களில் பொறுக்க முடியாதனவாகவே இருக்கும். ஆனாலும் வெயிலோ குளிரோ, மழையோ இடியோ சேர்ந்து இருந்து இருவரும் இவ்வளவு தூரம் கூடவே வந்துவிட்டோம். கலி முற்ற முற்ற ஆயுசு நிலவரங்கள் இருக்கிற இருப்பைப் பார்த்தால் இதையே

பெரிதாய்த்தான் நினைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. நம் குழந்தைகள் ஒற்றுமையோ வேற்றுமையோ அவர் அவர்கள் இருக்கிற இடத்தில் சுகமாயிருக்கிறார்கள் என்கிற செய்தி கேட்டுக் கொண்டிருக்கும்போதே நாம் கண் மூடிவிட்டால் போதும்.

இனி என்ன பாக்கி? 'எனக்கு நீங்கள்', 'உங்களுக்கு நான்' என்று இருவர்தாம் பாக்கி. இந்த இரண்டிலே யார் முந்தி, யார் பிந்தி என்கிறதுதான் பாக்கி.

உள்ளேயிருந்து பஞ்சாமியின் குரல் கூவிற்று. "அம்மா சாஸ்திரிகள் கூப்பிடுகிறார். ஔபாசனத்துக்கு நேரமாகி விட்டது."

இந்தச் சமயத்தில் நல்லது பொல்லாதது எல்லா வற்றையுந்தான் சேர்த்து இந்த மனசு எண்ணுகிறது; ஆடிப்பெருக்கில் மட்டை, செத்தை, குப்பை கூளம் எல்லாம் அடித்துக்கொண்டு வருவதுபோல.

அவர் போய் விட்டாரென்றால் அப்போதும் அவளைச் சுற்றித்தான் எல்லோரும் அடித்து வீழ்வார்கள், "அடி பாவி! இதுவரை இருந்தாயே; போதாதா? மஞ்சளும் குங்குமமும் மணக்க நீ போகக்கூடாதா? கொடுத்து வைக்காத கொடும்பாவி, கொடும்பாவி!" என்று தூற்றுவார்கள். வாஸ்தவந்தான், அவள் முந்திக்கொண் டால் அவள்வரை மணந்தான். ஆனால் அப்புறம் அவர் கதி என்ன ஆகிறது?

அவள் மாமியார் உயிரோடு இருக்கையில் சில சமயங் களில் வேடிக்கையாய், குத்தலுக்குக் குத்தலாய்ச் சொல் வதுண்டு; அவர் கொஞ்சம் இலக்கணமாயும் பேசுவார்: "ஒரு பிள்ளையைப் பெற்றவளுக்கு உறியிலே சோறு. நாலு பிள்ளையைப் பெற்றவளுக்கு நடுத் தெருவிலே சோறு. அதனால் கோயில், குளம், கதாகாலக்ஷேபமென்று போய்விட்டு நான் தைரியமாய் நேரங்கழித்து வீடு திரும்பலாம், எப்படியும் கண்டிப்பாய் எனக்கு உறியிலே

சோறு வைத்திருக்கும், நான் எடுத்துப் போட்டுக்கொண்டு தின்ன'' என்பார்.

'அது மாதிரி இவரைத் தவிக்க விட்டு விட்டு நான் மாத்திரம் மறைஞ்சுட்டால் இவரைக் கவனிக்கிற பொறுப்பு யாருடையது? பல் தேய்க்க வெந்நீர் எடுத்து வைக்கறதிலிருந்து ராத்திரி படுக்கிறதற்கு முன்னாலே மாத்திரையைக் கையிலே கொடுக்கிறவரை நானேதானே கவனிக்கிறேன்? மன்னன் இந்தத் துரும்பை எடுத்து அந்தப் பக்கம் வைக்க மாட்டாரே! சில சமயங்களில் குழந்தைக்குப் போடுகிறதுபோல், சாதத்தைப் பிசைந்து கையில் கூடப் போட்டிருக்கேனே!

'இதிலேயிருந்து ஒண்ணு தெரியறது. மஞ்சள், குங்குமம், சரடு, பிறத்தியார் அபிப்ராயங்கள், சுகம், துக்கம், பிள்ளைப்பாசம், புருஷன் பெண்டாட்டி உறவு இந்த எல்லாத்தையும் மீறி விசுவாசமென்று ஒண்ணு இருக்கிறது. எல்லாரும் சத்தியம்னு கொண்டாடறாளே, அதுதானோ அது?

'ஆனால் அது எதுவாயிருந்தால் என்ன? இனி நடக்கப் போகிறதை யார் கண்டது? யார் கையிலே இருக்கிறது?'

''அடே பஞ்சாமி, உன் அம்மாவைக் கையைப் பிடித்து இழுத்து வாடா! அவளே செவிடாகி விட்டாள். வயசாகி விட்டதோன்னா?'' என்று அவள் கணவர் உள்ளே கர்ஜிப்பது கேட்டது.

பெருமூச்செறிந்தபடி சாவித்ரி உள்ளே சென்றாள்.



